தேவ...

தென்னிந்தியா

வாசக புஸ்தகங்கள்




# ஐந்தாம் புஸ்தகம்

தென்னிந்தியா

வாசக புஸ்தகங்கள்

# ஐந்தாம் புஸ்தகம்



மாக்மில்லன் அண்டு கம்பெனி, லிமிட்டெட்
மதறாஸ், பம்பாய், கல்கத்தா, லண்டன்.
1925

 [விலை 6 அணா.




# பொருளடக்கம்.

## செய்யுள் பாடங்கள்.




# ஐந்தாவது வாசகம்







## 1. நாணயம்

1. பிள்ளைகளே! ஜனசமூகத்தில் ஒரு பண்டத்தைப் பெறுவதற்கு ஈடாகக் கொடுக்கப்படுகின்ற பொருளுக்கு நாணயம் என்று பெயர். இந்த நாணயங்கள் காலத்துக்குத் தகுந்தபடி பல பல விதங்களாக மாறிக்கொண்டு வருகின்றன.

2. பூர்வீக காலத்தில் ஜனங்கள் தமக்கு வேண்டிய பண்டங்களைப் பெறுவதற்குத் தங்களிடத்தில் இருந்த வேறு பண்டங்களையே ஈடாகக் கொடுத்துவந்தார்கள். உதாரணமாக, உப்பு வேண்டியவன் தன்னிடத்தில் உள்ள நெல் கம்பு சோளம் முதலான தானியங்களையோ, அல்லது மிளகு சீரகம் முதலான வஸ்துக்களையோ, அல்லது துணிமணி வகைகளையோ ஏதோ ஒன்றை ஈடாகக் கொடுத்து உப்பைப் பெறவேண்டும்.

3. கொடுக்கின்றவன் தனக்கு வேண்டி யிருக்கின்ற பொருள்களை மாத்திரம் ஈடாகப் பெறுவானே யல்லாமல், அவசியமில்லாத பொருள்களைப் பெற உடன்பட மாட்டான். இதனால், பண்டமாற்றுதல் செய்வது அதிக வருத்தமாயிருந்தது.

4. கொஞ்சம் நாகரிகம் பெருகிய பின்பு, ஜனசமூகத்தில் ஆடுமாடுகளை நாணயங்களாக வழங்கி வந்தார்கள். அப்பால்

அந்த ஏற்பாடும் நல்லதாகத் தோன்றவில்லை. ஏனென்றால், ஆடுமாடுகள் அடிக்கடி நோயில் விழுந்தும் மழை பொழியாத சில சமயங்களில் தீனியில்லாமல் வருந்தியும் அவர்களுக்கு அதிகமான நஷ்டத்தை உண்டு பண்ணின. ஆதலால் அதுவும் அவர்களுக்கு நல்ல வழியாய்க் காணப்படவில்லை.

5. பின்பு பொன் வெள்ளி முதலான உலோகங்களைக் கட்டி கட்டியாக வைத்து வழங்கி வந்தார்கள். உரைகல்லில் உரைத்து மாற்றுப் பார்க்கின்றவர்கள் சொல்வதை வேத வாக்கைப்போல நம்பவேண்டி யிருந்ததனால், அந்த ஏற்பாட்டில் அதிக மோசங்கள் நடக்கத் தலைப்பட்டன. மேலும் உலோகங்களை உரைகல்லில் அதிகமாக உரைத்தும், உருக்கி யுருக்கி எடைகளைக் குறைத்தும் கூட்டியும் வந்ததனால் நஷ்டமும் இடைஞ்சலும் அதிகமாயின.

6. பின்பு அந்த வழக்கத்தைத் தள்ளிப் பொன் வெள்ளிகளைச் சதுரம் சதுரமான தட்டைகளாக அடித்து ஈடுசெய்து வந்தார்கள். அப்புறம் அதுவும் சிறந்த வழியென்று அவர்களுக்குத் தோன்றவில்லை. ஏனென்றால், தட்டைகளின் விளிம்புகளைக் கொஞ்சம் கொஞ்சமாய் வெட்டிக் கல்லுதல் முதலிய மோசங்கள் நடந்துவரத் தலைப்பட்டன.

7. நாகரிகம் நன்றாய் முதிர்ந்த காலத்தில் மோசம் நடக்காதபடி அரசர்கள் தங்கள் முத்திரைகளை அந்தத் தட்டைகளில் பதியவைத்துவரத் தலைப்பட்டார்கள். பல அரசர்கள் அரசாட்சி செய்துவந்ததினால், ஒரு தேசத்து நாணயங்களை மற்றொரு தேசத்தில் ஈடு செய்வது வருத்தமாயிருந்தது. ஏனென்றால், எல்லாவிடங்களிலும் நாணயம் ஒரே விதமான மதிப்பை உடையதா யிருக்கவில்லை. தேசத்துக்குத் தேசம் வித்தியாசப்பட்டு வந்தது.

8. இந்தியாவுக்கு இங்கிலீஷ் அரசாட்சி ஏற்பட்டபின்பு தான் நாணயங்களுக்கு ஒரேவிதமான மதிப்பு உண்டாயிற்று. இப்போது இங்கிலீஷ் நாணயத்தின் ஒரு பக்கத்தில் சக்கரவர்த்தியின் தலையும், மறு பக்கத்தில் நாணயத்தின் மதிப்பும் அது பிறந்த வருஷமும் குறிக்கப்பட்டிருக்கின்றன. இதை எந்த விதமாகவும் மோசம் செய்யமுடியாது. இப்போது




பொன் வெள்ளி முதலானவைகளுக்கு மதிப்புத் திட்டமும் வித்தியாசப்படுவதில்லை.




9. ஒவ்வொரு இடங்களிலும் ஜனங்கள் அதிகமாய்ப் பெருகிப் பிறநாட்டு மனிதர்களோடு வியாபாரமும், போக்கு வரவும் நெருங்கிச் செய்துவரத் தலைப்பட்ட பின்பு கடித நாணயங்களையும் உண்டாக்கி வழங்கிவருகின்றார்கள்.

10. பொன் வெள்ளி நாணயங்களுக்கு இருக்கின்ற மதிப்பு, கடித நாணயங்களுக்கும் இருக்கின்றது. கொண்டு போவதற்கும் பத்திரப்படுத்துவதற்கும் கடித நாணயங்கள் மிகவும் சௌகரியமானவைகள்.

## 2. மம்மேலியா

1. ஜீவப்பிராணிகளின் கூட்டத்தில் மம்மேலியா வகுப்புப்பிராணிகள் முதலாவதாகும். மம்மேலியா வகுப்பைச் சேர்ந்த பிராணிகளெல்லாம் குட்டிபோட்டுப் பால்கொடுத்து வளர்ப்பவைகள். இந்த வகுப்பைச் சேர்ந்தவற்றிற்குப் பெரும்பாலும் அறிவும் வல்லமையும் அதிகமாயிருக்கும்.

2. குட்டிகளின் நிலைமை:—இவற்றில் சில ஜாதிக் குட்டிகள் பிறந்ததும் அங்குமிங்கும் ஓடச் சக்தியுள்ளனவாயிருக்கும். சில ஜாதிக் குட்டிகள் கண் விழியாமலும், பூர்த்தியான வளர்ச்சிக்கு வாராமலும் இருக்கும். வெளியில் வளர்ந்து காணப்படும் காதுகளையுடைய பிராணிகளெல்லாம் குட்டி போடும் என்பது பொதுவான அபிப்பிராயம். ஆனால் இந்த அபிப்பிராயம் திமிங்கில ஜாதிக்குப் பொருந்தாது.

3. சஞ்சாரம்:—மனிதஜாதி முதல் திமிங்கிலஜாதி வரையில் உள்ள இந்தப் பிராணிகள் ஒரே வகையான உடல் அமைப்போடு பிறந்தனவாயிருந்தாலும், தின்னும் உணவு, இருக்கும் இடம், செய்யும் தொழில், இவைகளுக்குத் தக்கபடி அவற்றின் அறிவும் அவயவங்களும் வித்தியாசப்படுகின்றன. உதாரணமாக, மனிதன், வௌவால், திமிங்கிலம், ஆகிய இந்த ஜாதிகளுக்கு நான்கு கால்கள் கிடையா. மனிதன் நிமிர்ந்து நடக்கிறான். வௌவால் ஆகாயத்தில் பறக்கின்றது. திமிங்கிலம் தண்ணீரில் நீந்துகின்றது. மனிதனுக்குக் கரங்களும், வௌவாலுக்குச் சிறகுகளோடு சம்பந்தப்பட்ட விரல்களும், திமிங்கிலத்துக்கு நன்றாய் நீந்தக்கூடிய சிறகுகளும் இருக்கின்றன.

4. கால்:—அநேகமாய் எல்லா மிருகங்களுக்கும் நான்கு கால்கள் இருக்கும். அந்தக் கால்களும் அவற்றின் தொழில்களுக்குத் தக்கபடி வேறுபட்டிருக்கும். யானை, காண்டாமிருகம், முதலான சில பிராணிகளுக்கு அவற்றின் பாரமான சரீரத்தைத் தாங்கக்கூடியபடி கால்கள் பருமனும் பலமும் உள்ளவைகளா யிருக்கின்றன. மான் முயல் முதலானவைகளுக்குக் கால்கள் ஓடுவதற்கு அநுகூலமாக மெல்லியவைகளாயும் பலமுள்ளவைகளாயும் இருக்கின்றன. ஆடு

மாடு ஒட்டகம் முதலான பிராணிகளுக்கு நிதானமாய் நடப்பதற்கு வேண்டியபடி கால்கள் விரி குளம்புகள் உள்ளவைகளாயிருக்கின்றன.

5. கை:—குரங்குகள் தவிர மற்ற மிருகங்களுக்குக் கைகள் இல்லை. குரங்குகளுக்கு மனிதர்களுக்கு இருப்பதுபோலக் கைகள் உண்டு. கை விரல்களைப்போலக் கால்களிலும் அவற்றுக்கு நீண்ட விரல்கள் உண்டு. இல்லாவிட்டால், அவை மரங்களில் பயமில்லாமல் தாவிக் குதிக்க முடியாது.

6. பல், நகம்:—மாமிச பக்ஷணிகளுக்குக் கூர்மையான கோரைப் பற்களும் மற்றையவைகளுக்குத் தட்டைப் பற்களும் இருக்கும். மாமிச பக்ஷணிகளுக்குக் கால்களில் கூர்மையான நகங்கள் உண்டு. அந்த நகங்கள் உள்ளே இழுக்கவும் வெளியே நீட்டவும் தக்கபடி அமைந்திருக்கின்றன.

7. பூமியில் புல் அடர்ந்த காடுகள் அதிகமாயிருக்கின்ற இடங்களில் பெரிய மிருகங்களும், துஷ்ட மிருகங்களும் அதிகமாயிருக்கும்.

## 3. குரங்கைப்பற்றிய ஒரு சம்பாஷணை

குப்புசாமி:—சுந்தரம்! நேற்று உபாத்தியாயர் எங்களுக்குக் குரங்குகளைப்பற்றிக் கற்பித்தார்.

சுந்தரம்:—போன வெள்ளிக்கிழமை குரங்காட்டி ஒரு குரங்கைக் கொண்டுவந்து வேடிக்கை காட்டினான். எனக்குக் குரங்குகளைக் கண்டால் அதிக ஆசை. அவற்றின் தன்மையைக் கேட்க விரும்புகிறேன்; குரங்குகளில் எத்தனை வகை உண்டு?

குப்புசாமி:—நாலைந்து வகைகள் இருக்கின்றன; நம் தேசத்தில் இருக்கின்ற குரங்குகளுக்கு வால் நீளமாயிருக்கும்; இவைகள் கூட்டம் கூட்டமாய்க் கிராமங்களுக்கு அருகிலுள்ள தோப்புகளில் வாழும்.

சுந்தரம்:—அவற்றுக்கு என்ன பெயர்?

குப்புசாமி:—இந்தியக் குரங்குகள் அல்லது அநுமான் குரங்குகள் என்று பெயர்.



சிம்பன்சி (பெண்)

சுந்தரம்:—அநுமான் குரங்கு என்று ஏன் அவைகளுக்குப் பெயர் வந்தது.

குப்புசாமி:—முன்பு அநுமான் என்ற பெயரோடு ஒரு பெரும் குரங்கு இருந்ததாம்; அது மனிதர்களால் செய்ய முடியாத அசாத்தியமான காரியங்களை யெல்லாம் சுலபத்தில் செய்து முடித்ததாம்; ஸ்ரீராமர் என்ற அவதார புருஷருக்குப் பணிவிடை புரிந்து நல்ல பெயரும் புகழும் அடைந்ததாம். அந்தக் குரங்கைப்பற்றிப் புலவர்கள் தங்கள் புஸ்தகங்களில் பலவாறு புகழ்ந்து எழுதியிருக்கிறார்கள்; இந்தக் குரங்குகளெல்லாம் அநுமான் குரங்கைப் போல இருப்பதால் இவற்றிற்கும் அந்தப் பெயர் கிடைத்துவிட்டது.

சுந்தரம்:—இவைகளும் சுறுசுறுப்பாய் வேலை செய்யுமோ?

குப்புசாமி:—ஆம், செய்யும்; தங்கள் கண்ணெதிரில் மனிதர்கள் செய்கின்ற ஒவ்வொரு காரியத்தையும் அப்படியப்படியே விடாமல் செய்து முடிக்கும்.

சுந்தரம்:—பாராத ஒன்றைச் செய்ய இவற்ருல் முடியாதா?

குப்புசாமி:—முடியாது: இவற்றின் அறிவு மனிதர்கள் புத்தியைப்போல ஒவ்வொன்றையும் ஆழ்ந்து யோசிக்கும் சுபாவ முடையதல்ல. விடா முயற்சியும் தந்திரமும் நிரம்பியிருப்பதனுல் பிறர் செய்வதைப்போலத் தாமும் செய்து முடித்துவிடும்; அவ்வளவுதான் அதனுல் முடியும்.

சுந்தரம்:—இவற்றுக்கு ஆகாரம் என்ன?

குப்புசாமி:—மாமிசம் ஒன்று நீங்கலாக மனிதர்கள் சாப்பிடும் ஆகாரம் எதையும் புசிக்கும்.

சுந்தரம்:—இவை எந்த இனத்தைச் சேர்ந்தவை?

குப்புசாமி:—மம்மேலியா இனத்தைச் சேர்ந்தவை; குரங்கின் பிறப்பிலிருந்துதான் மனிதப்பிறப்பை அடைய வேண்டும் என்று ஆங்கிலேய ஜீவவர்க்க சாஸ்திரிகள் சொல்கிருர்கள்.

சுந்தரம்:—அதிருக்கட்டும். குரங்குகளின் இயல்பு என்ன?

குப்புசாமி:—மரத்துக்கு மரம் தாவும். தோட்டங்களில் உள்ள பழம் காய் முதலானவற்றை எளிதில் பறித்துத் தின்றுவிடும். குட்டிபோட்டுப் பால் கொடுக்கும். குட்டிகளை வயிற்றில் அணைத்துக்கொண்டு மரங்களில் தாவித் திரியும்.

சுந்தரம்:—மரங்களில் ஓடினுல் தவறி விழுந்துவிடாவா?

குப்புசாமி:—விழா. அவற்றின் கால்கள் நம் கைவிரல்களைப் போல் கணுக்கள் உள்ளனவாய் மடக்கவும் நீட்டவும் தகுந்தபடி அமைந்திருக்கின்றன. நம் கட்டை விரல்களைப் போலவே அவற்றிற்கும் கட்டை விரல்கள் உண்டு. சில சமயங்களில் விரல்களால் மரக்கிளைகளைக் கெட்டியாய்ப் பிடித்துக்கொண்டு ஊஞ்சலாடும்.

சுந்தரம்:—இன்னொரு வகைக் குரங்குகளுக்குப் பெயர் என்ன?

குப்புசாமி:—மனிதக் குரங்குகள்.

சுந்தரம்:—அவை எங்கே சஞ்சரிக்கும்?

குப்புசாமி:—ஆப்பிரிக்கா கண்டத்தில் இருக்கிற வனங்களில் சஞ்சரிக்கும்.



கொரில்லா (ஆண்)

சுந்தரம்:—அவை எப்படி யிருக்கும்?

குப்புசாமி:—அவற்றிற்கு வால் கிடையாது; அந்தத் தேசத்தார் அவற்றிற்குக் கொரில்லா என்று பெயர் வைத்திருக்கிறார்கள்.

சுந்தரம்:—அவற்றின் தன்மை எப்படிப்பட்டது?

குப்புசாமி:—அவற்றிற்கு அதிக பலமும், எதற்கும் அஞ்சாத தீரமும் உண்டு. உருவத்திலும் பலத்திலும் மனிதனுக்கு மேலாயிருக்கும். அவற்றின் கைகள் முழங்தாள் வரையில் நீண்டிருக்கும். உடம்பு பெரும்பாலும் மயிர்களால் மூடப்பட்டிருக்கும். பெரும்பாலும்



கொரில்லா பூமியின்மேல் நடப்பது

மனிதனைப் போலவே காணப்படுகின்றபடியால், அவை களை மனிதக் குரங்குகள் என்று சொல்வதுண்டு.

சுந்தரம்:—அவை மனிதருக்கு என்ன உதவி செய்யும்?

குப்புசாமி:—அந்தத் தேசத்து மனிதர்கள் அவற்றைப் பிடித்துப் பழக்கி மனிதரைப்போலவே அநேகம் வேலைகள் செய்ய அவற்றிற்குக் கற்பிக்கிறார்கள். ஊராங் ஒட்டாங், சிம்பன்ஸி என்ற குரங்குகளும் இந்த இனத்தைச் சேர்ந்தவைகளே.

சுந்தரம்:—இன்னம் வேறு ஜாதிக் குரங்குகள் உண்டா?

குப்புசாமி:—உண்டு. அவற்றிற்குப் பாபூன் அல்லது நாய்க் குரங்குகள் என்று பெயர். ஆப்பிரிக்கா கண்டத்தில் தான் அவைகளும் இருக்கின்றன.

சுந்தரம்:—அவை எப்படிப்பட்டவை?



பாபூன்

குப்புசாமி:—அநுமான் குரங்கைப்போலவே அவைகளும் திரள் திரளாய்ச் சஞ்சரித்துத் தோட்டக் கனிகளை யெல்லாம் இரவில் கொள்ளையடிக்குமாம்.

சுந்தரம்:—அவற்றுக்கு வால் உண்டா?

குப்புசாமி:—இல்லை. எங்கள் உபாத்தியாயர் குரங்குகளைப் பற்றிச் சில கதைகள் சொல்லி யிருக்கிறார். அவற்றை உனக்கு மற்றொரு தடவை சாவகாசமாய்ச் சொல்கிறேன். இப்பொழுது விளையாடப்போகலாம், வா.

## 4. ஒரு பெண்பிள்ளையின் வீரம்

1. நீராவிக்கப்பலைக் கண்டுபிடிப்பதற்குமுன் பாய்மரக் கப்பல்கள்தான் கடலில் சஞ்சரித்து வந்தன. நாகரிகம் பெருகிய இந்தக் காலத்திலும் பாய்மரக் கப்பல் அடியோடு ஒழிந்துபோகவில்லை. சில இடங்களில் சிற்சில அபூர்வமாய் இருந்து வருகின்றன. பெரும் புயல் பெருமழை முதலான கடல் அபாயங்களுக்குப் பாய்மரக் கப்பலில் இருப்பவர்கள் அஞ்சவேண்டியிருக்கும். இந்த அபாயங்களைத் தாங்கமுடியாமல் அவைகள் கடலில் அமிழ்ந்துவிடுவதும் உண்டு.

2. கடலில் சில இடங்களில் நீரோட்டங்களும், மலைகளும், பாறைகளும் இருக்கின்றன. மாலுமிகள் அந்த இடங்களில் தங்கள் கப்பலை மிகுந்த எச்சரிக்கையுடன் ஓட்டிச் செல்லவேண்டும். போகும் வழியை விட்டு ஓர் அடி பிசகினாலும் கப்பலும் அதிலுள்ளவர்களும் கடலுக்கு இரையாக வேண்டியதுதான்.

3. கடற்கரையிலும் கடல் நடுவிலும் அப்படிப்பட்ட ஸ்தானங்களில் அபாயத்தை அறிவிப்பதற்காக நெடுந் தூரம் வரையில் வெளிச்சம் கொடுக்கும்படியான ஒரு வகை விளக்கு ஏற்றுவார்கள். அந்த விளக்கை உயர்ந்த இடத்தில் ஸ்தம்பம் ஒன்று கட்டி அதில் வைப்பார்கள். அதற்குத் தீபஸ்தம்பம் என்று பெயர். கப்பலோட்டிகள் அந்த அடையாளத்தைக் கண்டு அங்கே நெருங்காமல் எச்சரிக்கையோடு செல்வார்கள்.

4. இங்கிலாந்துக்கு அருகிலுள்ள மலைத் தீபஸ்தம்பம் ஒன்றில் ஒரு காவற்காரனும் அவன் மகளும் இருந்தார்கள். அந்தச் சிறுமிக்கு வயது பதினாறுக்கு மேல் இராது. ஒருநாள் இரவு பெரும்புயல் அடித்தது. பொழுது விடியுந் தருணத்தில் அவ்விருவரும் கடலைப் பார்த்தார்கள். அப்பொழுது மிகவும் பெரிய மாக்கலமொன்று கடற் பாறையில் தாக்கிப் பொங்கி எழும்பும் பேரலைகளால் அடி பட்டு அமிழ்ந்துபோவது இந்நிமிஷமோ மறுநிமிஷமோ என்னும் நிலையில் இருந்தது.

5. அந்த ஆபத்தைக் கரையிலுள்ளவர்களுக்கு எந்த விதத்தினாலும் தெரிவிப்பதற்குச் சாவகாசமில்லை. கப்பலில் உள்ளவர்கள் படும் கஷ்டம் பெரிதாயிருந்தது. காவற்காரனுக்கு அதைக் கண்டு சகிக்கமுடியவில்லை. தன் ஒற்றைப்படகை நடத்திக்கொண்டுபோய் அவர்களில் சிலரையாவது காப்பாற்றுவதற்கு எண்ணினான். ஆனால் ஊத்து மோதுகின்ற அலைகளுக்கு நடுவில் ஒருவனாய்ப் படகை நிர்வகித்துச் செலுத்தமுடியாதே என்று வருந்தினான்.

6. அப்பொழுது அவன் பெண் "தந்தையே! நான் தங்களோடு நின்று தண்டுவலித்துப் படகைச் செலுத்தி வருகிறேன். தாமதம் செய்யவேண்டாம். சீக்கிரம் பிரயத்



தனப்படுங்கள்" என்று துரிதப்படுத்தினுள். ஒரு நிமிஷமும் தாமதிக்க முடியாமலிருந்தபடியால் அவ்விருவரும் தங்கள் உயிருக்குத் துணிந்து உடனே புறப்பட்டுச் சென்றூர்கள்.

7. முதலில் கப்பலிருக்கின்ற இடத்துக்கு இவர்கள் போய்ச் சேருவதே அரிதாய்விட்டது. பின்பு ஒருவாறு தங்கள் முழுத்திறமையையும் காட்டிக் கப்பலை அடைந்தார்கள். அதற்குள் அந்தக் கப்பலில் முழுகினவர்போக மிகுந்த ஒன்பது பேரையும் மகா கஷ்டத்துடன் தங்கள் படகில் ஏற்றிக்கொண்டு அன்று பன்னிரண்டு மணிக்கு தீபஸ்தம்பத்துக்கு வந்து சேர்ந்தார்கள். அவர்கள் போய் வந்த தூரம் சாதாரணமாய் அரை மணியில் சென்று வரக் கூடியதுதான். ஆயினும், இப்பொழுது அதேதூரம் போய் வர அவர்களுக்கு ஆறுமணி நேரத்துக்கும் அதிகமாய்ச் சென்றுவிட்டது.

8. அக்கம் பக்கம் கிராமங்களில் உள்ள மனிதர்கள் அந்தப் பெண் துணிந்து ஒத்தாசை செய்த தைரியத்துக்குச் சந்தோஷமடைந்து எழு ஆயிரம் ரூபாய் வரையில்

சேகரித்து அவளுக்கு வெகுமதி செய்தார்கள். அந்தச் சிறுமி தான் முடித்த அற்பவேலையை எவ்வளவோ பெருமையாகப்பாராட்டித் தனக்கு இத்தனை கண்ணியம் செய்தார்களே என்று ஆச்சரியப்பட்டாள்.

9. பிள்ளைகளே! இவ்வளவு தைரியத்தோடு அவர்களைச் சென்று காப்பாற்றிய சிறுமியின் பெயரைத்தெரிந்துகொள்ள ஆசைப்படுவீர்களல்லவா? அவள் பெயர் கிரேஸ் டார்லிங்கு என்பதாம்.

## 5. சந்திரன்

1. பூமிக்கு அதிக சமீபத்தில் இருக்கும் கிரகம் சந்திரன். இரவும் பகலும் இடைவிடாமல் செல்லத்தக்க குதிரையும் போவதற்கு வழியும் இருந்தால் இரண்டு வருஷகாலத்தில் சந்திரமண்டலத்துக்கு ஒருவன் போய்ச் சேரலாம்.

2. சந்திரன் பூமியில் ஐம்பதில் ஒரு பாகம். ஐம்பது சந்திரன் சேர்ந்தால், இந்தப் பூமியை ஒத்திருக்கும். சந்திரன் இவ்வளவு சிறிதாயிருந்தும், பூமிக்குச் சமீபத்திலிருப்பதனால், அளவில் சூரியனைப் போலவே அதுவும் காணப்படுகின்றது.

3. சந்திரன் பூமியைச் சற்றேறக்குறைய இருபத்தெட்டு நாட்களில் சுற்றி வருகின்றது. அதற்கு இயல்பாக வெளிச்சம் கிடையாது. சூரியனிடத்திலிருந்துதான் அது ஒளி பெறவேண்டும். ஆதலால்தான் சந்திரன் சூரியனைப்போல உஷ்ணமும் மிகுந்த பிரகாசமும் இல்லாமல் மங்கலான ஒளி மட்டும் உடையதாய்க் காணப்படுகிறது.

4. இரவில் எங்கும் இருள் மூடி யிருப்பதனால் சந்திரன் மெருகிட்ட வெள்ளித் தகட்டைப்போல அதிகப் பிரகாசமாய்த் தெரிகின்றது. பகற்காலத்தில் சந்திரன் ஒரு வெள்ளை மேகத்தைக் காட்டிலும் பொலிவிழந்து காணப்படும்.

5. சந்திரன், பூமிக்கும் சூரியனுக்கும் இடையிலிருக்கும் பொழுது நம் கண்களுக்குத் தோன்றாது. அக்காலத்தை அமாவாசியை என்பார்கள். சந்திரனுக்கும் சூரியனுக்கும் நடுவில் பூமியிருந்தால் அதன் வெளிச்சமான பாகம் முழு

வதும் நமக்குத் தெரியும். அப்போது அதைப் பூரண சந்திரன் என்பார்கள். அக்காலத்தைப் பௌர்ணமி என்பார்கள்.

6. அமாவாசியைமுதல் பௌர்ணமி வரையில் சந்திரனுடைய வெளிச்சமான பாகம் தினமும் கொஞ்சம் கொஞ்சமாக நமக்கு வளர்ந்து தோன்றுகிறபடியால், அதை வளர்பிறை யென்றும், பௌர்ணமி முதல் அமாவாசியை வரையில் அதன் வெளிச்சமான பாகம் கொஞ்சம் கொஞ்சமாய்க் குறைந்து காணப்படுவதனால், அதைத் தேய்பிறை யென்றும் சொல்கிறார்கள். உண்மையில் சந்திரன் தேய்வதுமில்லை, வளர்வதும் இல்லை. அது எப்பொழுதும் ஒரே விதமாய்த் தான் இருக்கின்றது.

7. சந்திரனைத் தூரதிருஷ்டிக் கண்ணாடியால் பரிசோதித்துப் பார்த்தவர்கள் அதனிடத்தில் மலைகளும் சமபூமிகளும் இருப்பதாய்ச் சொல்கிறார்கள். அந்த மலைகளில் சில இரண்டு மைல் உயரமுள்ளனவென்றும் கணக்கெடுத்திருக்கிறார்கள். அந்த மலைகளின் அடிவாரங்களில் பாறைகளும் பெருங்கற்களும் விழுந்துகிடக்கின்றனவாம். சந்திரனுடைய மேற்புறம் அதிகமான மேடும் பள்ளமுமா யிருப்பதால் அதனிடத்தில் கடல் கிடையாதென்று நினைக்கிறார்கள்.

## 6. ஒட்டகம்

1. பிள்ளைகளே! என் பெயர் ஒட்டகம். என்னையும் என் சிநேகிதன் யானையையும் ஊர்கோலம் முதலிய விசேஷங்களில் நீங்கள் பார்த்திருப்பீர்கள். யானை அசங்கிதமான ஒரு தடிப்பிராணி. பக்கத்தில் உள்ள படத்தில் என் உருவமும் யானையின் உருவமும் இருக்கின்றன. பாருங்கள்! என்னைப் பாலைவனக் கப்பல் என்று சொல்வார்கள். நான் ஆடுமாடு முதலிய அசை போடுகின்ற விலங்கினத்தைச் சேர்ந்தவன். என் நீண்ட கழுத்தினால் மரத்தளிர்களையும் நிலத்தில் முளைத்து வளருகின்ற புற்களையும் சுலபமாய்க் கடித்துத் தின்று வயிற்றை நிரப்பிக் கொள்வேன். வேப்பிலையில் எனக்குப் பிரியம் அதிகம்.

2. பாலைவனம் என்பது பெரிய மணற்காடு. அங்கு என் உதவியில்லாவிட்டால், நீங்கள் அதைக் கடந்து செல்லக் கஷ்டப்படுவீர்கள். என்னைத் தவிர வேறு எந்தப்

பிராணியும் பாலைவனத்தில் பிரயாணம் செய்ய முடியாது. பிரயாணம் என்றால், ஒருநாள் இரண்டுநாள் அல்ல; மாதக் கணக்காக அந்த மணற்காட்டில் வெயிலிலும் காற்றிலும் செல்லவேண்டி யிருக்கும்.

3. ஆப்பிரிக்கா கண்டத்திலிருக்கின்ற சஹாரா என்னும் பாலைவனத்தைப் பற்றிக் கேள்விப்பட்டிருப்பீர்கள். அது உலகத்திலிருக்கிற எல்லா மணற்காடுகளிலும் பெரியது. அதைக் கடப்பதற்குக் குதிரைவண்டி, மாட்டுவண்டி, மோட்டார்வண்டி முதலிய வண்டிகள் பயன்படா. நூற்றுக் கணக்கான மைல்தூரம் பரவியிருக்கின்ற அந்த மணற்காட்டைக் கடப்பதற்கு நான்தான் பயன்படுவேன். திடீரென்று சுழற்காற்று உண்டாகி மணல்களை ஒரு ஆள் உயரம் மேலுக்குக் கிளப்பிப் பிரயாணிகளையும் எங்களையும் அடியோடு தூர்த்துவிடுவதும் உண்டு.



4. உணவும் தண்ணீரும் இல்லாமலே வாரக் கணக்காய் அங்குப் பிரயாணம் செய்யவேண்டும். பிள்ளைகளே! என் முதுகில் வளர்ந்திருக்கிற மூட்டையைப் பாருங்கள். அதற்குத் திமில் என்று பெயர். உணவு கிடைக்கும் பொழுது அதிகமாய்த் தின்று அதில் சேர்த்துவைத்துக் கொள்ளுவேன். பத்து நாளைக்கு வேண்டிய தண்ணீரை ஒரே மொத்தமாய் நிரப்பிக்கொள்ளக்கூடிய பெரிய பை ஒன்று என் வயிற்றில் இருக்கிறது. நான் அந்தப் பை நிரம்பத் தண்ணீர் நிரப்பிக்கொள்வேன்.

5. ஆகாரம் கிடைக்காத சமயங்களில் திமிலிலுள்ள உணவும் பையிலுள்ள தண்ணீரும் கொஞ்சம்கொஞ்சமாய் எனக்கு

உபயோகப்படும். என்னைப்போல் உங்களால் இருக்க முடியாது. இது கடவுள் எனக்குக் கொடுத்த ஒரு பெரிய வரம்.

6. என்னுடைய தொங்கிக்கொண்டிருக்கின்ற புருவங்களைப் பாருங்கள். இவை கண்களில் மணற்பொடிகளும் தூசிகளும் விழவொட்டாமல் பத்திரமாய்க் காக்கின்றன. என் புருவங்கள் உங்கள் புருவங்களைப்போல இருந்தால் மணற்காட்டில் பிரயாணம் பண்ணும்பொழுது பொடி மணல்கள் விழுந்து ஒருநாளுக்குள்ளாக என் கண்கள் குருடாய்விடும்.

7. என் பாதங்கள் மெத்தென்றிருப்பதனால் மணலில் புதைந்துபோவதில்லை. என்னை வளர்த்துப் பயன் பெறுகின்றவர்கள் அரேபியர்கள்தான். நான் அவர்களுக்குப் புஷ்டியுள்ள பாலைக் கொடுக்கிறேன். ஆனால் அதில் கொஞ்சம் தண்ணீர் கலந்து உண்ணவேண்டும். இல்லாவிட்டால் ஜீரணமாகாது. வருஷத்துக்கு ஒரு முறை குட்டிபோடுவேன். ஒவ்வொரு தடவையிலும் ஒரு குட்டிக்குமேல் போடமாட்டேன்.

8. என் மயிர் வருஷாவருஷம் கத்தரிக்கப்பட்டுச் சிறந்த கம்பளங்களாக உபயோகப்படுகின்றது. என்மீது அதிகமான பளுவை ஏற்றினாலும் அல்லது வேறுவிதமாய் என்னை இம்சித்தாலும் எனக்குக் கோபம் உண்டாகும். அப்பொழுது சமயம்பார்த்து அவர்களைத் தூக்கிப்போட்டுக் காலால் மிதித்து நாசம் செய்துவிடுவேன்.

9. இதையறிந்து சில மோசக்காரர்கள் நடுவழியில் தாங்கள் படுத்திருப்பதுபோலத் தங்கள் உடைகளை விரித்துவைக்கிறார்கள். நாங்கள் உண்மையான மனிதர்கள் என்று எண்ணி அந்த உடைகளைத் துவைத்துக் கிழித்து நாசம் செய்து சாந்தமடைகிறோம். வரவர அவர்கள் மோசம் தெரிந்துவிட்டது. இனி ஏமாறமாட்டோம். நீங்கள் எனக்குக் கோபம் உண்டாக்காமல் இருந்தால் சாந்தமாயிருப்பேன்.

10. பிள்ளைகளே! சில துஷ்டர்கள் தண்ணீரும் மாமிசமும் கிடைக்காத சமயங்களில் எங்களைக் கொன்று எங்களிடத்திலிருக்கிற தண்ணீரையும் மாமிசத்தையும் எடுத்துக் கொள்கிறார்கள். தார்த்தாரி தேசத்திலிருக்கிற எங்கள் இனங்களுக்கு முதுகில் இரண்டு திமில்கள் உண்டு.

11. நாங்கள் உங்களைத் தூக்கிக்கொண்டு ஒரு நாளைக்கு அறுபது மைல் தூரம் களைப்பில்லாமல் ஓடுவோம். அதிகமான பாரம் ஏற்றிவிட்டால் மெதுவாய் நடந்து முப்பது மைல் செல்லுவோம். அன்புள்ளவர்கள் எங்களுக்கு வாற் கோதுமை முதலான தானியங்களை வேகவைத்துக் கொடுப்பார்கள். நாங்கள் அவர்களிடத்தில் அதிக பக்ஷமாய் நடந்து கொள்ளுவோம்.

## 7. காகிதம்

சிவகுமாரன்:—ஐயா! காகிதம் எதனால் செய்யப்படுகின்றது?

உபாத்தியாயர்:—நார்களாலும் துணிக்கந்தைகளாலும் செய்யப்படுகின்றது.

சிவ:—இதைத்தவிர வேறொன்றினாலும் செய்யப்படுவதில்லையா?

உபாத்தி:—பருத்தி முதலான சில மிருதுவான வஸ்துக்களாலும் செய்யலாம்.

சிவ:—கிழிந்து குப்பையிற்போன கந்தைகளும் நார்களும் எப்படிக் காகிதங்களாகின்றன, ஐயா?

உபாத்தி:—கந்தைகளை நன்றாய்ச் சலவைசெய்து தண்ணீரில் ஊறவைத்துப் பின்பு அவற்றை ஒருவகைப் பெட்டியில் போடுவார்கள்.

சிவ:—பெட்டியில் என் போடவேண்டும்?

உபாத்தி:—அவற்றைச் சிறிய துண்டுகளாக்கி அரைத்துக் கலக்கிக் கஞ்சியாக்குவதற்காக.

சிவ:—பெட்டியில் போட்டால் கஞ்சியாய்விடுமோ?

உபாத்தி:—அந்தப் பெட்டியின் உட்புறமெல்லாம் கூர்மையுள்ள பல கத்திகள் வரிசையாக நடப்பட்டிருக்கும். பெட்டியின் நடுவிலும் அவ்விதமே கத்திகள் கோக்கப்பட்ட மரவுருளை ஒன்று காணப்படும். கந்தைகளைப் போட்டதும் இரண்டு மனிதர்கள் மரவுருளையை வேகமாய்ச் சுற்றுவார்கள். உருளை சுழலும் வேகத்தினால் உள்ளே இருக்கின்றவை

கள் கத்திகளிற்பட்டு நைந்து தண்ணீரிற் கரைந்து கஞ்சி போலக் குழம்பாகின்றது.

சிவ:—பின்பு அந்தக் குழம்பை என்ன செய்வார்கள்?

உபாத்தி:— அதில் ஒருவகைச் சுண்ணும்பு போட்டு அடுப்பில் வைத்துக் காய்ச்சி மறுபடியும் ஒருமுறை அழுக் கெடுப்பார்கள்.

சிவ:—முன்புதான் சலவை செய்திருக்கிறுர்களே?

உபாத்தி:—இருந்தாலும் அப்பொழுது எல்லா அழுக் கும் நீங்காது. ஆகையால்தான் கஞ்சியான பிறகும் ஒரு தடவை அழுக்கெடுத்து விடுகிறுர்கள்.

சிவ:—ஏன் அழுக்கெடுக்கவேண்டும், ஐயா?

உபாத்தி:—காகிதங்கள் சுத்தமாயிருப்பதற்குத் தகுந்த படி கஞ்சியும் வெண்மையா யிருக்கவேண்டும்.

சிவ:—அப்புறம் அந்தக் கஞ்சியை என்ன செய்வார்கள்?

உபாத்தி:—நுட்பமான தந்திக்கம்பியால் வஸ்திரம்போல நெருக்கமாய்ப் பின்னியிருக்கின்ற ஒரு அச்சைச் சூடாயிருக் கின்ற அந்தக் கஞ்சியில் நன்றுய்த் தோய்த்து மெதுவாய் அசைத்தெடுப்பார்கள்.

சிவ:—ஏன் அப்படிச் செய்யவேண்டும்?

உபாத்தி:—கஞ்சியின் ஏடு மாத்திரம் அச்சில் நுட்ப மாய்ப் படிவதற்காகத் தோய்த்து எடுக்கிறுர்கள்.

சிவ:—பின்பு என்ன செய்வார்கள்?

உபாத்தி:—கீழே கம்பளத்தை விரித்து அந்தக் கஞ்சி யேட்டை மெதுவாய் அதில் பரப்பி அதன்மேலும் மற்றொரு கம்பளத்தை விரித்து அடுக்குவார்கள்.

சிவ:—அதுதான் காகிதமோ?

உபாத்தி:—ஆம், கஞ்சி முழுமையும் இங்ஙனம் தோய்த் துத் தோய்த்து அடுக்கியபின்பு, அவற்றைப் பாரமான இயந் திரத்தில் வைத்து அழுத்திக் கொடிகளில் காயவிடுவார்கள்.

சிவ:—ஒற்றும் காகிதம் எழுதும் காகிதம் இரண்டும் இப்படியே செய்யப்படுகின்றனவோ?

உபாத்தி:—ஆம், ஆனால் எழுதும் காகிதங்களைப் பிசின் உள்ள ஒரு தொட்டியில் இரண்டுதடவை நனைத்து இயந்திரத்தில் அமுக்கியெடுப்பார்கள். ஒற்றும் காகிதத்தை அப்படியே உலரவைத்து விடுவார்கள்.

சிவ:—பல வர்ணங்களில் காகிதம் காணப்படுகின்றதே அதற்கு எப்பொழுது வர்ணம் கொடுப்பார்கள் ஐயா?

உபாத்தி:—கஞ்சியா யிருக்கும்பொழுதே வேண்டிய வர்ணப்பொடிகளை அதில் கலந்துவிடுவார்கள்.

சிவ:—இதைத் தவிர வேறு வகையில் காகிதம் செய்யப் படுவதில்லையோ?

உபாத்தி:—இப்பொழுது இயந்திர சகாயத்தால் கையால் தொடாமலே காகிதம் செய்துவருகிறார்கள். இயந்திரத்தில் கந்தைகளைக் கொடுத்தால், அது மற்றோரிடத்தில் காகிதமாக வெளிப்படுகின்றது.

சிவ :—கைவேலையைக் காட்டிலும் இயந்திரவேலை சுலபமாய்க் காணப்படுகின்றதே?

உபாத்தி: — ஆம் இயந்திரவேலை துரிதமும் நாணயமுமானது. இப்பொழுது உலகத்தில் இயந்திர உதவியினால் தான் காகிதங்கள் செய்யப்படுகின்றன.

## 8. நீதி

1. இந்தியாவை முன்காலத்தில் அரசாண்டு வந்த மகமதிய சக்கரவர்த்திகளுள் பெர்ஷா என்பவன் ஒருவன். இவன் டெல்லிப் பட்டணத்தில் சிங்காசனம் ஏறினான். இவன் காலத்தில் ராஜ்யம் மிகவும் அமைதியா யிருந்தது.

2. இவனுக்கு ராஜ்யங்கள் இன்னும் அதிகமாய்ச் சம்பாதிக்கவேண்டும் என்ற பேராசை கிடையாது. உள்ள ராஜ்யத்தை நன்றாய் ஒழுங்குசெய்து ஆளவேண்டும் என்பதே இவன் எண்ணம். இவன் காலத்தில் இவன் முயற்சியால் பயிர் செய்வதற்கு அநுகூலமான அநேக வாய்க்கால்களும் ஏரிகளும் குளங்களும் வெட்டப்பட்டன.

3. இவன் குடிகளிடத்தில் ஆறில் ஒரு பாகத்தையே பகுதிப்பணமாக வசூல்செய்து வந்தான். நியாய சபைகளை நியமித்து அவைகள் நன்றாய் நடக்கின்றனவா என்று தானே

நேரில் சென்று பார்த்துவந்தான். நியாயம் என்பது இவன் காலத்தில் நடுநெறியை விட்டுச் சிறிதும் தவறுவதில்லை. எவனும் சட்டமாய் ஏற்பட்ட விதிகளை மீறக்கூடாது. இதை விளக்குவதற்கு அடியில் உள்ள சரித்திரம் ஒன்றே போதுமானது.

4. பெர்ஷாவின் அரண்மனைக்குச் சமீபத்தில் ஒரு எளிய வர்த்தகனுடைய நெசவுச் சாலை ஒன்றிருந்தது. அதில் நூற்



அரசனும் வர்த்தகனும்

றுக்கணக்கான மனிதர்கள் வேலைசெய்துவந்தார்கள். பஞ்சை நூல் நூற்பதும், சாயம் ஏற்றுவதும், வஸ்திரம் நெய்வதும் ஆகிய தொழில்கள் அங்கு நடந்துவந்தன.

5. வேலை துவக்குவதற்கும், ஒழிவு நேரம் கொடுப்பதற்கும், வேலையை முடிப்பதற்கும், எச்சரிக்கை மணி கணகண வென்று ஒலிக்கும். இரவும் பகலும் ஓயாமல் வேலை நடந்து வந்ததனால் அங்கு எப்பொழுதும் மணியோசை கேட்டுக் கொண்டிருக்கும்.

6. பெர்ஷா அரசனுக்கு அந்த மணியோசை அதிக இடைஞ்சலை உண்டுபண்ணிற்று. நல்ல தூக்கத்தை நாசம்

செய்துவிடும். ஆழ்ந்த யோசனையை அவலப்படுத்தும். அவன் தன்னை மறந்திருக்கும் சில சமயங்களில் நெஞ்சம் திடுக்கிடச் செய்யும்.

7. ஒருநாள் அவன் அந்த வியாபாரியை வரவழைத்து "வர்த்தகரே! உம்முடைய வர்த்தகச் சாலையின் மணியோசை எனக்கு அதிகக் கஷ்டத்தை உண்டுபண்ணுகின்றது. ஒன்று நீராவது என் அரண்மனையை விலைக்கு வாங்கிக்கொள்ளும்; நான் வேறு இடத்தில் கட்டிக்கொள்ளுகிறேன். அல்லது எனக்காவது உம்முடைய வர்த்தகச் சாலையை விலைக்குக் கொடுத்துவிடும்,'' என்று கூறினன்.

8. வர்த்தகன் வணங்கி "மகாராஜாவே! தங்கள் அரண்மனையை விலைக்கு வாங்கும்படியான அவ்வளவு பொருள் என்னிடத்தில் இல்லை. என் வர்த்தகச் சாலையை விற்றுவிடுவதற்கும் இஷ்டம் இல்லை. தங்கள் பொருள் தங்களிடமும், என் வர்த்தகச்சாலை என்னிடமும் இருக்கட்டும். ஒருவர்க்கொருவர் மாற்றிக்கொள்ளவேண்டாம்,''என்று சொன்னன்.

9. அரசன் "ஐயா! அப்படியல்ல. நீர் கட்டாயம் கொடுத்தே தீரவேண்டும். உமக்கு இஷ்டமான விலையைக் கேளும், கொடுத்துவிடுகிறேன்,'' என்றான். வர்த்தகன் "பெருந்தன்மையுள்ள அரசே! அந்த வர்த்தகச் சாலை என் பாட்டனார் காலம் முதல் நடந்துவருகின்றது. பாட்டனர், தந்தை, நான், ஆகிய மூவரும் பிறந்து வளர்ந்து விளையாடிவந்தது அந்த இடத்தில்தான். என் மக்களும் அங்குப் பிறந்து இப்பொழுது விளையாடி வருகிறார்கள். அந்த இடம் எனக்குச் சுவர்க்கத்தைக் காட்டிலும் உயர்ந்தது. நான் என் உயிரினும் அதிகமாக அந்தச் சாலையை நேசித்து வருகிறேன். ஆதலால் அதை விலைப்படுத்த எனக்கு இஷ்டம் கிடையாது,'' என்று கூறினன்.

10. அதற்குப் பெர்ஷா "வர்த்தகரே! உம்முடைய இஷ்டத்தை நான் அங்கீகரிக்க மாட்டேன். என் காரியஸ்தர்களைக்கொண்டு அந்த இடத்துக்கு மதிப்புப்போடச் சொல்கிறேன். அவர்கள் சொல்கின்ற மதிப்புத்தொகையை நீர் பொக்கிஷத்தில் பெற்றுக்கொண்டு போகவேண்டியது தான்'' என்றான்.

11. வர்த்தகன் "அரசே, அது ஒருபொழுதும் நடவாத காரியம். நான் இஷ்டப்பட்டு விலைப்படுத்தினாலன்றி அந்த இடம் தங்களுக்குச் சொந்தமாகமாட்டாது. டோக்களாக்கு அரசர் காலமாயிருந்தால் விலையில்லாமலே அபகரித்துக் கொள்ளலாம். இது பெர்ஷா அரசருடைய நீதிகாலம். நியாய விரோதமாக எவரும் பிறர் சொத்தைச் சுவாதீனம் செய்து கொள்ள முடியாது" என்று அஞ்சாமல் கூறினான்.

12. அரசன் உடனே எழுந்து அவனை ஆலிங்கனம் செய்துகொண்டு "வர்த்தகரே! எனக்கு அந்த இடம் வேண்டாம். நீர் சுகமாய் வைத்துக்கொண்டு அநுபவித்து வாரும். என் குடிகள் அரசனுக்கு அடங்குகின்றார்களா அல்லது நீதிக்கு அடங்குகின்றார்களா, என்பதைப் பரிக்ஷிக்கக் கேட்டேனே யன்றி வேறில்லை. உம்முடைய வசனம் எனக்கு ஆயிரம் புதிய அரண்மனைகள் கிடைத்தாற்போ லாயிற்று" என்று கூறி அவனைக் கௌரவப்படுத்தி அனுப்பினான்.

## 9. நிலக்கரி

1. பொன் வெள்ளி முதலான தாதுவர்க்கங்களில் நிலக்கரியும் ஒன்று. ஐரோப்பிய தேசங்களின் பெருஞ் செல்வத்துக்கு நிலக்கரி முதற் காரணம். நிலக்கரி பூமிக்குள் படை படையாக அதிக ஆழத்தில் ஒன்றன்மேல் ஒன்றாய் அமைந்து படிந்திருக்கும்.

2. உலகம் இப்போது இருக்கிற நிலைமைக்கு வருவதற்கு நெடுங்காலத்துக்கு முன்பு ஆறுகள் அடித்து ஒதுக்கிய மரம் செடி புல் பூண்டு முதலியவைகள் சமுத்திரத்தடியில் ஆழ்ந்து இலக்ஷக்கணக்கான வருஷங்கள் மட்கிக்கிடந்தன. பின்பு பூகம்பம் முதலான காரணங்களால் கடலும் நிலமும் ஒன்றாய்ப் புரள அந்த மரம், செடி முதலியன நிலத்தில் புதைந்து அங்கங்கே படிந்துவிட்டன. அவைகள்தாம் நிலத்தில் கரியாகக் கிடைக்கின்றன. அவற்றையே நிலக்கரி என்கின்றோம்.

3. இந்தக் கரிப்படை, நிலத்தில் சுமார் எண்பது அல்லது நூறு அடி ஆழத்தில் இருக்கிறது. இது கிடைக்கின்ற இடங்களை நிலக்கரிச் சுரங்கங்கள் என்று சொல்கிறார்கள்.

சில சுரங்கங்கள் கடலின் அடிப்பாகத்தில் ஊடுருவிச் சென்றிருக்கின்றன. அந்தச் சுரங்கங்களின்மேல் கடல்மட்டத்தில் கப்பல்கள் ஓடிக்கொண்டிருக்கின்றன.

4. நிலக்கரிச் சுரங்கங்களில் வேலை செய்கின்றவர்களுக்குப் போதுமான அளவு சூரிய வெளிச்சம் கிடைக்காது. ஆதலால், அவர்கள் கண்கள் குவிந்து சிறுத்து இமை வீங்கியிருக்கும். நம் இந்தியாவில் விறகு உபயோகப்படுகின்ற காரியங்களுக்கெல்லாம், காடுகள் இல்லாத ஐரோப்பிய தேசங்களில் நிலக்கரி உபயோகிக்கப்படுகின்றது.

5. இங்கிலாந்துக்கு நிலக்கரி பொன்போலும் உயர்ந்த ஒரு பெரும் பிரயோஜனமான பொருள். இங்கிலாந்தில் எல்லா இடங்களிலும் நிலக்கரியிலிருந்து உண்டாகின்ற ஒருவித வாயுவினால் விளக்கு எரிந்துவருகின்றது. உலகம் முழுவதிலும் ஒரு வருஷத்தில் வெட்டியெடுக்கப்படுகின்ற நிலக்கரியின் எடை நாற்பது கோடியே இருபது லக்ஷம் பாரம் என்று கணக்கிட்டிருக்கிறார்கள். அதில் இங்கிலாந்தில் மாத்திரம் சற்றேறக்குறைய முப்பது கோடி பாரம் எடுக்கப்படுகின்றது.

6. தற்காலத்தில் இந்தியாவிலும் பம்பாய் கல்கத்தா முதலான மாகாணங்களில் நிலக்கரிக் கனிகளைக் கண்டுபிடித்து வேலை செய்து வருகிறார்கள். சென்னை மாகாணத்திலும் துங்கபத்திரை கோதாவரி நதி தீரங்களில் நிலக்கரி அகப்படுமென்பது பூமி சாஸ்திரிகளின் அபிப்பிராயம். இப்பொழுது நிலக்கரி இல்லாவிட்டால் உலகம் முழுவதும் உறங்கிப் போய்விடுமென்பது நிச்சயம். ஏனென்றால், பலவகையான வேலைகளுக்கு உபயோகப்படும். ஆயிரக் கணக்கான இயந்திரங்களில் பெரும்பாலன நிலக்கரியின் உதவியினால்தான் நடைபெறுகின்றன.

## 10. வனம்

1. முன் காலத்தில் பட்டணங்களையும் கிராமங்களையும் சுற்றிக் காடுகள் நன்றாய்த் தழைத்து வளர்ந்திருந்தன. மனிதர்களோடுகூடி வாழ்வதில் வெறுப்படைந்த சில பெரியோர்கள் அந்தக் காடுகளிலிருந்து தவம்செய்து வந்தவர்களென்று

சரித்திரம் சொல்லுகின்றது. அந்தக் காலத்தில் நாட்டில் கிடைக்கக்கூடிய சுகங்களைவிட அதிகமான சுகங்கள் காடுகளில் அவர்களுக்குக் கிடைத்துவந்தன. அதனால், வனவாசிகள் என்ற பெயரோடு குடும்பம் குடும்பமாய் அநேகர் அங்கு வசித்துவந்தார்கள்.

2. நானு ஜாதி விலங்குகளும் விதம் விதமான பறவைகளும் காட்டில் களித்து வாழும். பூக்கள் காய்கள் கனிகள் கீரைகள் கிழங்குகள் மருந்துக்கு வேண்டிய சரக்குகள் முதலான பலவும் அங்கே சுலபமாய்க் கிடைத்துவந்தன. இயற்கைப் பொருள்களின் அற்புதங்களை உண்மையில் கண்டு சாதுரியமாய் எழுதவல்ல பண்டிதர்களுக்கு அவை களஞ்சியங்களா யிருந்தன.



வனத்திலுள்ள மிருகங்கள்

3. நல்ல விஷயங்களுக்கு இடையில் கெட்ட விஷயங்களும் ஒன்று இரண்டு கலந்திருப்பதுபோலக் காடுகளால் சில இடைஞ்சல்கள் உண்டாவதும் சகஜமல்லவா? அங்குள்ள துஷ்ட விலங்குகள் கிராமங்களிற் புகுந்து ஆடுமாடு

களைத் தின்றும் பயிர்களை அழித்தும் சில வேளைகளில் எதிர்ப்பட்ட மனிதர்களைக் கொன்றும் உபத்திரவம் உண்டு பண்ணும்.

4. நாகரிகம் பெருகியபின்பு சில அதிகாரிகள் காடுகள் நிலத்திற் பெரும்பாகத்தை ஆக்கிரமித்துக்கொண் டிருக்கின்றன என்றும், அந்த நிலங்களைச் சாகுபடிக்கு விட்டால் துரைத்தனத்தாருக்கு அதிகமான இலாபம் கிடைக்குமென்றும் எடுத்துக் காட்டி, நாளடைவில் எல்லாக் காடுகளையும் அழித்துப் பண்படுத்தும்படி உத்தரவு கொடுத்துவிட்டார்கள். அதனால், சில காலத்தில் காடுகளே பூண்டற்றுப் போயின.

5. காடுகள் இல்லாவிட்டால், நாட்டுக்கு நேரிடுகின்ற குறைகள் இன்னின்னவை என்று கொஞ்ச காலத்துக்கு முன்தான் சர்க்காருக்குத் தெரிந்தது. அதன் பின்பு ஆங்காங்குக் காலியாயிருந்த நிலங்களில் மரம் செடிகளை வைத்து வளர்த்துக் காடுகளாக்கிக் காவல்செய்து வருகிறார்கள்.

6. பிள்ளைகளே! காடுகளின் உபயோகத்தைக் கவனியுங்கள்: மரங்கள் நெருங்கி வளர்ந்து சூரிய வெப்பத்தை இலைகளால் தாங்கிக் கீழ் நிலத்தை வறண்டுபோக விடாமல் பசுமையாய் வைத்துக்கொண்டிருக்கின்றன. சமீபத்தில் உள்ள கிராமங்களுக்கும் பட்டணங்களுக்கும் குளிர்ச்சியான காற்றை உண்டுபண்ணுகின்றன. மரம் செடிகளின் வேர்கள், மேகங்கள் பொழியும் மழைத்தண்ணீர் நிலத்தினுள்ளே செல்வதற்கு வழிகளாகின்றன.

7. காட்டு நிலம் முழுவதும் புல புலவென் றிருப்பதனால் மழைத்தண்ணீரை உள்ளுக்கிழுத்துக் கீழ் ஊற்றாக அக்கம் பக்கங்களில் உள்ள விளைநிலங்களுக்கு உதவுகின்றது; காடுகள் பயிர்த்தொழிலுக்கு இன்றியமையாத ஏர் கலப்பைகளுக்கு வேண்டிய மரங்களையும், வீடு கட்டுவதற்கு வேண்டிய மரங்களையும் கொடுக்கின்றன; வாயுமண்டலத்தை வறளவிடாமல் குளிர்ச்சியாய் வைத்திருக்கின்றன; பயிர் செய்வதற்கு வேண்டிய எரு தழை முதலானவற்றை ஏராளமாய்த் தருகின்றன; ஆடு மாடுகளுக்கு வேண்டிய இலை தழைகளை வளர்த்து உதவுகின்றன; அடுப்பெரிப்ப

தற்கும் புகைராத எஞ்சின் முதலான இயந்திரங்களை நடத்து வதற்கும் வேண்டிய விறகுகளைக் கொடுக்கின்றன; விஷக் காற்றை உட்கொண்டு சுத்த வாயுவை வெளிவிடுகின்றன.

8. காடுகளில்லாவிட்டால் நீராவிப் படலங்கள் அவ்வள வும் குளிர்ச்சியடைவதற்கு மார்க்கமில்லாமல் அப்படியே உலர்ந்து தீய்ந்துபோகும்; உலகத்தில் பஞ்சம் தலை யெடுக் கும். ஆகையால், உலகத்துக்கு எல்லையில்லாத உதவியைச் செய்கின்ற காடுகளை அடியோடு அழித்துவிடுவது எவ்வளவு அறியாமை பாருங்கள்! இன்னம் கொஞ்சகாலத்தில் இந்தி யாவிலுள்ள வளர்ப்புக் காடுகளெல்லாம் நன்றாய் வளர்ந்து பலன் தருமென்று எல்லாரும் எதிர்பார்க்கிறார்கள்.

## 11. வாயு

1. வாயுவைப்பற்றி முன்னொரு புஸ்தகத்தில் படித் திருக்கிறீர்களல்லவா? வாயுவானது ஜீவகோடிகளுக்கு இன் றியமையாதது. வாயுவில்லாவிட்டால் ஒரு பிராணியும் ஜீவித் திருக்க முடியாது; புல் பூண்டுகளும் முளைக்கமாட்டா; விளக் கும் நெருப்பும் எரியா; சத்தம் கேட்காது, மழைபொழியாது.

2. வாயுவானது பிராணாதாரமான ஆக்ஸிஜன், நைட் ரோஜன் என்று சொல்லப்படுகின்ற இரண்டு வஸ்துக்கள் சேர்ந்த ஒரு கலப்புப் பொருள். ஜீவப்பிராணிகள் சுவாசம் வாங்கும்போது வாயுவை உட்கொள்ளுகின்றன. வாயுவில் கலந்திருக்கின்ற ஆக்ஸிஜனானது சுவாசாசயத்தில் சிறிய நரம் புகளில் உள்ள உதிரத்தோடு கலந்து அதைச் சுத்தம் செய் கிறது.

3. ஜீவகோடிகள் வெளியே சுவாசம் விடும்போது நைட் ரோஜனும் அவற்றின் உடலில் உண்டாகின்ற கரித்திராவ கம் என்னும் விஷத்தன்மையுள்ள ஒரு வாயுவும் வெளிப்படு கின்றன. நைட்ரோஜன் என்பது ஜீவப்பிராணிகளுக்குக் கொஞ்சமும் உபயோகப்படமுடியாத ஒரு விஷ வாயு.

4. ஆனால், இந்த விஷவாயுவான நைட்ரோஜன் புல் பூண்டு மரம் முதலான தாவர வர்க்கங்களை வளர்ப்பதற்கு இன்றியமையாததா யிருக்கிறது. இந்த வாயுவில் கரியும் ஆக்ஸிஜனும் சேர்ந்திருக்கின்றது.

5. சூரியவெளிச்சத்தின் உதவியினல் தாவரங்கள் இந்த நைட்ரோஜனில் உள்ள கரியையும் ஆக்ஸிஜனையும் வேறுபிரித்துத் தங்கள் வளர்ச்சிக்கு வேண்டிய கரியைக் கிரகித்துக் கொண்டு ஆக்ஸிஜனை வெளிப்படுத்துகின்றன.

6. பிள்ளைகளே! ஜீவஜந்துக்களும் தாவர வர்க்கங்களும் இவ்விதம் ஒன்றுக்கொன்று உதவிசெய்யும்படி படைத்திருக்கின்ற கடவுளுடைய அற்புத சக்தி எப்படிப்பட்டதென்று யோசித்துப் பாருங்கள்.

7. விளக்கில் சுடர் உண்டாவதற்கும் ஆக்ஸிஜனே முக்கிய காரணம். விளக்கெரியும்போது கொழுப்பு அல்லது எண்ணெயிலுள்ள வஸ்துக்கள் ஆக்ஸிஜனேடு கலக்கின்றன. ஆக்ஸிஜனில்லாத வாயுவில் விளக்கு எரியமுடியாது. உதாரணமாக, ஒரு பாத்திரத்தில் விளக்கேற்றி அதில் புதிய வாயுவை நுழையவிடாமல் வாயை நன்ருய் மூடிவிட்டால் கொஞ்சநேரத்தில் அந்த விளக்கு அணைந்துபோவதைக் காணலாம்.

8. அதற்குக் காரணம் என்னவென்ருல், அந்தப் பாத்திரத்தில் முன்பு நிறைந்திருந்த வாயுவிலுள்ள ஆக்ஸிஜனெல்லாம் விளக்கெறிவதனுல் கழிந்துபோனதனுல் பின் எரிவதற்கு ஆக்ஸிஜன் இல்லாமையே.

9. பூமிக்குள் அடைபட்டுக் கிடக்கின்ற பாழுங்கிணற்றிலும், நெடுங்காலமாய் மூடப்பட்டிருக்கின்ற நிலவறைகளிலும், இந்த விளக்குப் பரிக்ஷையினுலேயே அங்கிருக்கின்ற வாயுவின் தன்மையைத் தெரிந்துகொள்கிருர்கள். விளக்குச் சுடரின் பிரகாசம் அங்குள்ள வாயுவின் சுத்தத்துக்குத் தகுந்ததாயிருக்கும்.

10. நாம் விஷ வாயுவை உட்கொண்டால் நோயில் விழுந்து வருந்திப் பின்பு மரணத்துக்கு ஆளாவோம். ஆதலால், நாம் குடியிருக்கின்ற வீடுகளில் தாராளமாகச் சுத்தவாயு உள்ளே சென்று வரும்படி விசாலமான பலகணிகளையும் நிலைகளையும் அமைத்துக்கொள்ளவேண்டும். நாம் விடுகின்ற விஷவாயுவை யெல்லாம் அடிக்கடி சுத்தப்படுத்திக் கொடுப்பதற்கு வீட்டுக்கு அருகில் செடிகளையும் மரங்களையும் வைத்துப் பயிராக்க வேண்டும்.

## 12. சிநேகம்

1. ஒருகாலத்தில் தாமன் என்ற தத்துவசாஸ்திரிக்குத் தியோனிஸியஸ் என்ற கொடுங்கோல் அரசன் மாண தண்டனை விதித்தான். தண்டனை அடைவதற்கு ஒரு நாளும் குறிக்கப்பட்டது.

2. தத்துவசாஸ்திரி நெடுந்தூரத்தி லிருக்கின்ற தன் மனைவி மக்களைப் பார்த்துவரும்படி உத்தரவு கேட்டான். 'குறித்த தினத்தில் வந்து சேராவிட்டால், உன் தண்டனையை ஏற்றுக்கொள்வதற்கு வேறொருவரை ஜாமீன்வைத்துப்போ' என்று அரசன் சொன்னபடியால் தாமன் அந்த ஆசையை விட்டுவிட்டான்.

3. இந்தத் தத்துவ சாஸ்திரிக்குப் பிதியஸ் என்பவன் நண்பனு யிருந்தான். அவன் அதைக் கேள்விப்பட்டு, தான் ஜாமீன் இருந்து தாமனை விடுதலை செய்தான். பலவிதமான இடைஞ்சல்களினுல் தாமன் குறிப்பிட்ட தினத்தில் வந்து சேர முடியவில்லை.

4. தண்டனை பெறவேண்டிய தினத்தின் நடுப்பகல்வரையில் அவன் வாராததனல், அவனுக்குப் பதில் பிதியஸைக் கொலைக்களத்துக்கு அழைத்துக்கொண்டு போனுர்கள். ஜனக்கூட்டத்தின் நடுவில் அந்தக் கொடிய அரசனும் ஒரு ஆசனத்தில் அமர்ந்திருந்தான்.

5. பிதியஸ் கொலையாளிகளை நோக்கி "சகோதரர்களே என் அருமை நண்பனுகிய தாமன் வந்து சேர்ந்துவிடுவான். அவன் வந்து என்னை விடுவிப்பதற்குள்ளாகவே சீக்கிரம் என்னைக் கொன்றுவிடுங்கள். அவன் உயிர் அருமையானது. அவன் இதுவரையில் அநேகம் நூதன விஷயங்களைக் கண்டுபிடித்திருக்கிருன். அவன் க்ஷேமமாயிருந்தால், இன்னம் எத்தனையோ நூதனவிஷயங்களைக் கண்டுபிடித்து உலகத்துக்கு உபகாரம் செய்வான். அவன் மூளையில் வளர்ந்து பலன் கொடுக்கக்கூடிய எத்தனையோ விஷயங்கள் இன்னம் முளைகளாகவே இருக்கின்றன. நெடுநாள்களாக நான் அவனேடு பழகிவருகிறேன். லோகோபகாரியாகிய அவன் உயிரைக் காப்பாற்றுவதற்கு என்னைச் சந்தோஷத்தோடு ஒப்புக்கொடுக்கிறேன். சீக்கிரம் என்னைத் தூக்கிவிடுங்கள்" என்று கூறினுன்.



6. அத்தருணத்தில் "நிறுத்து! நிறுத்து!! தூக்குவதை நிறுத்து!!!" என்று ஒரு சத்தம் உண்டாயிற்று. ஜனங்களும் அதைக்கேட்டு அப்படியே கூவினார்கள். தாமன் வந்துவிட்டான். ஏறிவந்த குதிரை வியர்த்து நுரைத்துப் பெருமூச்சு விட்டுக்கொண்டிருந்தது.

7. அவன் கீழே குதித்துத் தூக்கு மேடையின்மேல் ஏறிப் பிதியஸை நோக்கி "நண்பனே! நல்ல சமயத்தில் வந்துவிட்டதற்குச் சந்தோஷிக்கிறேன். நீ இனி இங்கே இருக்கவேண்டாம். கீழே இறங்கி வீட்டுக்குச் செல். நான் போனது முதல் காற்று எதிர்முகமாக வீசி யடிக்கின்றபடியால், சொன்னபடி வந்துசேரக் கூடாமற் போயிற்று" என்று கூறினான்.

8. அதைக் கண்டதும், தியோனிஸியஸ் என்ற அரசனுக்கு மனம் இளகிவிட்டது. அவன் உடனே தூக்குமேடையில் ஏறி, அந்த இரண்டு நண்பர்களையும் தட்டிக்கொடுத்து "அருமை நண்பர்களே! நீங்கள் இறக்கவேண்டாம். இப்படியே நெடுநாள் உயிரோடிருந்து உங்கள் நட்பை வெளிப்படுத்துங்கள்" என்று சொல்லி அவர்கள் இருவரையும் விடுதலை செய்துவிட்டான்.

## 13. சவுக்கு

1. சவுக்கு மரத்தைத் தென்னிந்தியாவில் பல இடங்களிலும் காணலாம். அடுப்பெரிப்பதற்கும் எஞ்சின்களை நடத்துவதற்கும் பெரும்பாலும் சவுக்கு மரங்கள்தாம் எரி கட்டைகளாக உபயோகப்படுகின்றன. இந்த மரத்தைக் கவனித்துப் பயிர் செய்கின்றவர்கள் இல்லை. மேடுகளிலும் காடுகளிலும் மனம் போனபடி வைத்து வளர்க்கிறார்கள்.

2. முழுவதும் களிப்பு மண்ணாயிருக்கிற நிலம் தவிர மற்ற எந்த இடத்திலும் இந்த மரம் பயிராகும். ஆனாலும், இது நன்றாய்ப் பயிராவதற்கு உவர் சம்பந்தமுள்ள மணல் நிலம் சிரேஷ்டமானது. இந்த மரத்தைச் சில இடங்களில் நாற்றுவிட்டுப் பிடுங்கி நடுகிறார்கள். வேறு சில விடங்களில் இள நாற்றுகளைப் பதியம்போட்டு ஒரு வருஷத்துக்குள் எடுத்து நட்டுப் பயிர் செய்கிறார்கள். இரண்டாவது முறைப்படி செய்வதுதான் உயர்ந்தது.

3. காய் முற்றியதும் வெடித்து விதைகளெல்லாம் கீழே உதிர்ந்து போய்விடும். அப்பொழுது நல்ல விதைகளைப் பொறுக்கி எடுக்கமுடியாது. அதனால், காய்கள் பழுக்க ஆரம்பித்தவுடன் அவற்றைப் பறித்து ஒரு மண்பாத்திரத்தில் போட்டு இரண்டொரு நாள் அதன் வாயை வைக்கோலினால் மூடிவைப்பார்கள். பின்பு துணியை விரித்து அந்தக் காய்களைக் கொட்டி நன்றாய்ப் பரப்பி மேலேயும் மென்மையான ஒரு துணியை விரித்துக் காயவைப்பார்கள். விதைகள் உமியைப்போலக் கனமில்லாமல் காற்றில் பறந்துவிடுமாதலால் இங்ஙனம் பத்திரம் செய்யவேண்டும்.

4. விதைகள் நன்றாய் உலர்ந்தபிறகு இரண்டுமாதம் ஆறவைத்து விதைப்பது நல்லது. பின்பு பாத்திகளைச் சுத்தம் செய்து விதைத்துச் சாம்பல் அல்லது எருத்தூள்களை நன்றாய்த் தெளித்து வைக்கோலினால் மூட்டம் போடவேண்டும். ஒரு வாரம் வரையில் இரண்டு வேளையும் தண்ணீர் தெளித்துவந்தால், அதற்குமேல் முளை கிளம்பும். பிறகு ஒருவேளைத் தண்ணீர் போதுமானது.

5. பாத்திகளில் இரண்டுமாதம் வளர்ந்ததும் அவற்றைப் பிடுங்கி வேறு ஓர் இடத்தில் பதியம் போடுவார்கள். அதில்

ஏழு அல்லது எட்டு மாதம் வரையில் வளரும். பின்பு நிலத்தை நன்றாய் உழுது உரப்படுத்தி ஐந்து அல்லது ஆறடிக்கு ஒரு குழி வீதம் வெட்டி ஆறவிடுவார்கள். குழிகளில் வண்டல் சாம்பல் ஆட்டுப் புழுக்கை இவற்றில் எதையாவது ஒன்றை நிரப்பிக் கன்றுகளை நடவேண்டும்.

6. முதல் இரண்டு மாதம் வரையில் தினமும், அடுத்த இரண்டு மாதம் வரையில் இரண்டுநாளைக்கு ஒருதடவையும், அதற்கு அடுத்த மாதத்தில் வாரத்துக்கு ஒரு முறையும் தண்ணீர் பாய்ச்சுவது பெரும்பாலும் போதுமானது. நிலத்தின் தன்மையினால் இந்த விதி சில சமயங்களில் மாறுபடுவதும் உண்டு. சவுக்கு மரத்தின் வளர்ச்சிக்கு வெள்ளாடு ஒரு பெருஞ் சத்துரு. ஆதலால் நிலத்தை நன்றாய் வேலியடைத்து ஆடுமாடுகள் வராதபடி பாதுகாக்கவேண்டும்.

7. எவ்வளவு கருத்தாய்க் காப்பாற்றி வந்தாலும் நூற்றுக்குப் பத்துக் கன்றுகள் சராசரியில் உலர்ந்துபோகும். அப்பொழுது அந்தக் கன்றுகளுக்குப் பதில் வேறு புதிய கன்றுகளைப் பதித்துப் பழுது பார்ப்பது அவசியம். முதல் இரண்டு வருஷம் வரையில் அக்கன்றுகளோடு ஆமணக்கு கேழ்வரகு கடலை முதலான கீழ்த்தரமான பயிர்களைச் சாகுபடி செய்யலாம். இதில் இரண்டு வகையான இலாபம் கிடைக்கும். முதலாவது அந்தப் பயிர்களின் மாசூல் கிடைக்கும். இரண்டாவது அவற்றின் தழைகள் மட்கி நிலம் உரப்பட்டுச் சவுக்குக் கன்றுகள் செழுமையாய் வளர்வதற்கும் புஷ்டியை உண்டாக்கும்.

8. வருடந்தோறும் பக்கக் கிளைகளை வெட்டி மரத்தை ஒழுங்குசெய்ய வேண்டும். இல்லாவிட்டால் மரம் பருத்து வளரமாட்டாது. எட்டு வருஷங்களுக்குமேல் சவுக்கு மரங்களை வெட்டுவது நல்ல மாதிரி. நன்றாய் வளர்ந்த ஒரு ஏக்கர் நிலத்தில் சுமார் 1,300 மரங்கள் வெட்டும் காலத்திலும் இருக்கும்.

9. ஒரு ஏக்கரில் இருநூறு டன் நிறையுள்ள விறகு எடுக்கலாம். ஒரு ராத்தல் எடையுள்ள சவுக்கு விதைக்கு விலை பத்து அணா. இந்த ஒரு ராத்தல் விதைகளிலிருந்து மூவாயிரம் கன்றுகள் உற்பத்தியாக்கலாம். இதன் தழையை

மட்கச் செய்தால் நல்ல எரு ஆகும். காற்றடிக்கும்போது மரத்தில் ஒரு வித சத்தம் உண்டாவதைக் காணலாம். கொட்டகை பந்தல் முதலானவைகளுக்குத் தூண்களாகவும் உத்தாங்களாகவும் சவுக்கு மரத்தை உபயோகிக்கிறார்கள்.

## 14. எஜமானனும் வேலைக்காரனும்

1. பெருமை பொருந்திய அலெக்ஸாண்டரோடு இந்தியாவில் எதிர் நின்று நெடுநாள்வரையில் சண்டைசெய்தவர் புருஷோத்தமர் என்ற வீரர். இவர் மிகுந்த பெருந்தன்மையும் பரோபகார குணமும் பொருந்தியவர்.

2. ஒருநாள் இரவில் புருஷோத்தமர் தமது படுக்கையறையில் உட்கார்ந்து படித்துக்கொண்டிருந்தார். அப்பொழுது சுந்தர் என்ற ஒரு வேலைக்காரன் அவர் சாப்பிடுவதற்குக் காய்ச்சிய பாலை ஒரு பாத்திரத்தில் வைத்துச் சென்றான்.

3. புருஷோத்தமர் சற்று நேரம் படுத்துவிட்டுப் பாலைப் பருகுவதற்குப் பாத்திரத்தைத் தூக்கினார். மேலே தொங்கிக்கொண்டிருந்த ஒரு பெரிய சிலந்திப்பூச்சி திடீரென்று அந்தப் பாலில் விழுந்துவிட்டது. உடனே அவர் அந்தப் பூச்சியை எடுத்துவிட்டார். ஆனாலும், பால் சூடாயிருந்ததனால், அது விழுந்ததும் இறந்துபோயிற்று.

4. பிறகு அந்தப் பாலைப் பருகுவதற்கு அவர் இஷ்டப்படவில்லை. வேறு பால் கொண்டுவரச் சொல்லலாமென்று அறைக்கு வெளியிலிருந்த வேலைக்காரனைக் கூப்பிட்டார். அவன் வரவில்லை.

5. இரண்டாவது தடவை 'சுந்தர்! சுந்தர்!!' என்று உரக்கக் கத்தினார். அதற்கும் பதில் கிடைக்கவில்லை. வெளி வாசலில் இருக்கின்ற வேலைக்காரனாவது வந்து சேரட்டும் என்று மூன்றாவது தடவை மணியை அடித்தார்.

6. அப்போது பக்கத்து அறையில் துப்பாக்கி வெடித்த சத்தம் ஒன்று கேட்டது. புருஷோத்தமர் உடனே பரபரப்போடு எழுந்து அந்த அறைக்கு ஓடினார். சுந்தர் துப்பாக்கியினால் தன்னையே சுட்டுக்கொண்டு மரணாவஸ்தையில் இருந்தான். எவ்வளவு உபசரணை செய்தும் அவன் பிழைக்கவில்லை; இறந்துவிட்டான்.



7. அவன் புரளும்போது அவனது சட்டையிலிருந்து ஒரு கடிதம் கீழே விழுந்தது. புருஷோத்தமர் அதை எடுத்துப் பார்த்தார். அதில் "மகாராஜாவே! தங்களுக்குப் பாலில் விஷத்தைக் கலக்கும்படி ஒருமாதகாலமாக என்னைச் சிலர் நிர்ப்பந்தப்படுத்தி வந்தார்கள். நான் உடன்படாமலிருந்தேன். பின்பு என்னையும் என் குடும்பத்தையும் அடியோடு நாசம் செய்து விடுவதாய்ப் பயமுறுத்தினார்கள். நான் இன்று பாலில் விஷத்தைக் கலந்து வைத்தேன். இனி எச்சரிக்கையா யிருங்கள். நான் பிழைத்தால் கடிதம் வெளிப்படாது. தாங்கள் பிழைத்தால் கடிதத்தைத் தெரிந்து கொள்ளுங்கள். இதை என் வீட்டிலேயே எழுதிக்கொண்டு வந்தேன்" என்று எழுதியிருந்தது.

8. புருஷோத்தமர் "என்ன ஆச்சரியம்! சிலந்திப் பூச்சி விழுந்து சாகாமலிருந்தால், பாலைப் பருகி நான் இறந்து போயிருப்பேனல்லவா? கடவுள் சிலந்திப் பூச்சியினால் நமது

உயிரைக் காப்பாற்றினர். ஆ! கடவுளின் செயலை அறிவார் யார்?'' என்று எண்ணிக் கடவுளைப் போற்றினர்.

## 15. மம்மேலியா—2

1. தன்மை:—பூமியின் சீதோஷ்ண ஸ்திதிக்குத் தக்கபடி ஆங்காங்கு வசிக்கின்ற பிராணிகளும் வித்தியாசப்படும். குளிர்ச்சியான தேசத்தில் வாசம் செய்கிற பிராணிகள், குளிரைத்தாங்கத்தக்க அடர்த்தியானஉரோமங்களையாவது, அல்லது கொழுப்போடு கலந்த தடித்த தோல்களையாவது, உடையனவா யிருக்கும். உஷ்ணதேசத்து மிருகங்களுக்கு அந்த இரண்டும் அவசியமல்ல.

2. குணம்:—மாமிச பக்ஷணிகளான விலங்குகள் கூட்டமா யிருக்க விருப்பம் கொள்ளா, தனித்து வாசம்செய்யும். சாகபக்ஷணிகள் எப்போதும் தனித்து வாசஞ் செய்யா, கூட்டமாய்ச் சேர்ந்தே வாழும்.

3. தற்காப்பு:—ஒவ்வொரு பிராணியும் தன்னைக் காப்பாற்றிக்கொள்வதற்கு, ஒவ்வொரு சத்தியை உடையதா யிருக்கிறது. கொம்புகள், தந்தங்கள், முள்ளைப் போன்ற தடித்த உரோமங்கள், நகங்கள், பற்கள், விஷங்கள், இவைகள் எல்லாம் சத்துருக்களிடத்தி லிருந்து தப்பித்துக் கொள்வதற்குச் சாதனங்களாகும். பெரிய விலங்குகளின் விருத்தி கொஞ்சமாயும், சிறிய விலங்குகளின் விருத்தி அதிகமாயும் இருக்கும்.

4. காது:—சிங்கம் புலி முதலான துஷ்டவிலங்குகளின் காதுகள், முன்னே யிருக்கின்ற மிருகங்களின் சிறிய சத்தங்களையும் கேட்கத் தக்கபடி உள்வளைந்து முன்னோக்கிக் காணப்படும். மான் முயல் முதலான அஞ்சும் இயல்புற்ற பிராணிகளின் காதுகள்,சத்துருக்கள் திடீரென்று தோன்றித் தங்களைப் பிடித்துக்கொள்ளாதபடி எவ்வளவு சிறிய சத்தங்களையும் கவனித்து அறிந்துகொள்ளும் வண்ணம் உள்வளைந்து பின்னோக்கிக் காணப்படுகின்றன. சிலவற்றுக்குக் காதுகள் எந்தப் பக்கத்திலும் அசைந்து ஆடிக்கொண்டிருக்கும்.

5. வால்:—வால் நீளமாய் உடம்பில் மொய்க்கின்ற ஈ, கொசுகு,பூச்சி,புழு முதலானவற்றைஓட்டிக்கொல்லுவதற்கு

அநுகூலம் செய்கின்றது. சில பிராணிகளுக்கு அந்த வாலில் அழகான மயிர்க்குஞ்சங்கள் இருக்கும். மொத்தத்தில் உடம்பு மயிர் அடர்ந்ததாயும் தடித்த தோல் உள்ளதாயும் இருக்கின்ற ஜந்துக்கள் குட்டையான வால் உடையனவாகவேனும், வால் இல்லாதனவாகவேனும் இருக்கும்.

6. மடி:—பெண் விலங்குகளின் மடி பருவ காலங்களில் பெரிதாகிப் பால் சுரக்கும். இரண்டு காம்புகளுக்குக் குறைந்த மடியுள்ள ஜந்துக்கள் கிடையா. குட்டிகளின் தொகைக்குத் தக்கபடி மடிக்காம்புகள் அதிகமாயிருக்கும். குரங்கு, யானை, ஆடு முதலானவற்றிற்கு இரண்டும், மாடு, மான், சிங்கம் முதலானவைகளுக்கு நான்கும், பூனைக்கு எட்டும், நாய் முயல்களுக்குப் பத்தும், பன்றிக்குப் பன்னிரண்டும், எலிக்குப் பத்தும், அல்லது பன்னிரண்டுமாக மடிகள் காணப்படுகின்றன.

## 16. நெருப்புக்கோழி

1. பறவைகளில் மிகப் பெரியது நெருப்புக்கோழி. இது சாதாரணமாக ஏழு எட்டு அடி உயரம் வளரும். இது ஒரு அவலக்ஷணமான பறவை. இதன் தலை மிகவும் சிறியது. கழுத்து நீண்டு இருக்கும். கழுத்திலும் தொடையிலும், இதற்கு இறகு கிடையாது. காலில் மெல்லிய செதிள்களும் இரண்டு விரல்களும் இருக்கும்.

2. இது பறவை இனத்தில் சேர்ந்ததாயிருந்தாலும் பறக்காது; விரைவாக ஓடும். அதிக வேகமுள்ள குதிரையும் இதன் ஓட்டத்தை எளிதில் பிடிக்கமுடியாது. கொஞ்சதூரம் ஓடிக் களைத்து நின்றுவிடாது. நெடுநாள் தொடர்ச்சியாக அப்படியே விடாமல் ஓடிக்கொண்டிருக்கும்.

3. இது புல் பூண்டு முதலான தாவர பதார்த்தங்களைத் தின்னும். கந்தை, தோல், பளிங்கு ஆணி முதலான எவற்றைக் கண்டாலும் எடுத்து விழுங்கிவிடும். இது அரேபியாவிலும் ஆப்பிரிக்காவின் பாலைவனங்களிலும் கூட்டம் கூட்டமாய்ச் சஞ்சரிக்கும்.

4. அரேபியர்கள் இந்தத் தீக்குருவியைக் குதிரையின் மேலேறி வேட்டையாடுவார்கள். நாலைந்து நாள்கள் வரை



யில் ஒருவர் மாறி ஒருவராக இதைத் துரத்திச்செல்வார்கள். நெருப்புக் கோழிக்கு இனித் தான் தப்பித்துக்கொள்ள முடியாதென்று நன்ருய்த் தெரிந்துவிட்டால், மணலிலாவது புதர்களிலாவது தலையைமாத்திரம் மறைத்துக்கொள்ளும். அப்பொழுது அதைக் கொன்றுவிடுவார்கள்.

5. மணலில் பள்ளம் தோண்டி இரண்டு மூன்று பறவைகள் ஒன்ருய்ச் சேர்ந்து முட்டையிடும். ஒவ்வொன்றும் மாறி மாறி அம் முட்டைகளை அவயம் காத்துக்கொண்டிருக்கும்.

6. நெருப்புக் கோழிக்கு மோப்பத்தினுல் எதையும் அறிந்துகொள்ளும் சத்தி உண்டு. யாராவது தன் முட்டைகளைத் தொட்டுவிட்டால் மோப்பத்தினுல் அதை அறிந்துகொள்வதுமன்றி, உடனே முட்டைகளையெல்லாம் மிதித்தும் உடைத்தும் நாசம் செய்துவிடும்.

7. அதன் முட்டைகள் பெரியவைகளாயும் பலமும் உள்ளவைகளாயும் இருக்கும். ஒவ்வொரு முட்டையும்

பத்து ஆழாக்குக்கும் அதிகமான தண்ணீர் கொள்ளும் அளவுடையது. அந்த நாட்டு மனிதர்கள் அம் முட்டைகளின் உள்ளே யிருப்பதை உண்டு ஓடுகளை ஜலபாத்திரமாக உபயோகிக்கிறார்கள். அதன் மாமிசத்தையும் தின்கிறார்கள்.

8. அது அதிக உபயோகமுள்ள பறவை. அதன் இறகுகள் அதிக அழகாயிருப்பதனால் மேல் நாட்டு ஸ்திரீகள் அதை உயர்ந்த விலைகொடுத்து வாங்கித் தலையாபரணமாக உபயோகிக்கிறார்கள். அதன் தோல் பதனிடப்படுகிறது. ஒரு தீக்குருவி இரண்டு மனிதர்களைத் தன் முதுகில் சுமந்து வேகமாய் ஓடும். அந்தத் தேசத்தில் அந்தப் பறவை குதிரையைப்போல மனிதர்களுக்குப் பயன்படுகிறது.

## 17. செம்பு, பித்தளை

1. செம்புக்குத் தாமிரம் என்று பெயர். இது மங்கலான சிவப்பு நிறமுள்ள ஒரு உலோகம். பொன் வெள்ளிகளுக்கு அடுத்தபடியில் இருப்பது தாமிரம்தான். இது தண்ணீரைவிட ஒன்பது மடங்கு கனமுள்ளது. செம்பு, கனிகளிலிருந்து வெட்டி எடுக்கப்படும்.

2. வெள்ளியைப் போலவே செம்பையும் கம்பியாகவும் தகடுகளாகவும் இழுத்து அடித்துக்கொள்ளலாம். செம்புக்கு ஓசை அதிகம். பொன் வெள்ளிகளைக் காட்டிலும் இது எளிதில் அகப்படக் கூடியது.

3. செம்பில் அதிக சீக்கிரத்தில் களிம்பு பிடிக்கும். புளி பட்டதும் களிம்பேறுவது இதற்கு இயற்கை. இந்தக் களிம்பு பச்சை நிறமாயிருக்கும். இது விஷத்தன்மையுள்ளது. இந்தியாவில் போஜன பதார்த்தங்கள் செய்வதற்குச் செம்பாலாகிய பாத்திரங்களை உபயோகிக்கிறார்கள். வெள்ளீயம் பூசினால் செம்பில் களிம்பு ஏறாது. சமையற் பாத்திரங்களுக்கு அவசியம் வெள்ளீயம் பூச வேண்டும். செம்புக்களிம்பு அதிக விஷத்தன்மையுள்ளது. இந்தக் களிம்போடுகூடிய உணவைப் புசித்தால் நாம் நோயடைவோம். முட்டையிலுள்ள வெள்ளைக்கரு செம்பின் களிம்பைக் கெடுத்துவிடும். இந்தக் களிம்புக்குத் துருசு என்று பெயர். வைத்தியர்கள் இதைச் சுத்தமாக்கிச் சில ஔஷதங்களில் உபயோகிக்கிறார்கள்.



4. உலகத்தில் செம்பு பல வகையில் உதவுகின்றது. கப்பல்கள் கடல் தண்ணீரில் எப்பொழுதும் நனைந்துகொண்டிருப்பதனால் செம்புத் தகடுகளை அவற்றின் அடிப்பக்கத்தில் அடித்துக்காப்பாற்றுகிறார்கள். இன்னம் தவலை, கொப்பறை, தட்டு, செம்பு, குடம் முதலான பெரிய பாத்திரங்கள் செய்வதற்கும், வீட்டுக்கு வேண்டிய அலங்காரப் பொருள்கள் செய்வதற்கும் செம்பு உபயோகப்படுகிறது.

5. மின்சாரமானது தாமிரத்தில் அதிகமாய்ப் பற்றுவதனால் அதை உண்டாக்குவதற்கு வேண்டிய சாமான்கள் பலவும் தாமிரத்தாலேயே செய்யப்படுகின்றன. இன்னம் துரைத்தனத்தார் செம்பினால் நாணயங்கள் செய்து வழங்குகிறார்கள். அரையணா, காலணா, பை, இவைகள் செம்பு நாணயங்கள்.

6. செம்புச் சுரங்கங்கள் இங்கிலீஷ் தேசங்களில் விசேஷமாயிருக்கின்றன. இங்கிலாந்து, ஸ்காத்லாந்து, அயர்லாந்து, வேல்ஸு இந்தத் தேசங்களில் வருஷம் ஒன்றுக்கு அறுபத்தேழாயிரத்து இருநூறு பாரம் செம்பு வெட்டி எடுக்கப்படுகின்றது. அதன் மதிப்பு சுமார் ஒன்றரைகோடி ரூபாயாகும்.

7. இரண்டு பங்கு செம்போடு ஒரு பங்கு துத்தநாகம் கலந்தால் பித்தளையாகிறது. பித்தளை மஞ்சள் நிறமானது. பித்தளையில் நல்ல மெருகு ஏறும். கடைச்சல் வேலைக்குப் பித்தளை மிகவும் ஏற்றது. செம்பைப்போல இதில் அவ்வளவு சீக்கிரமாய்க் களிம்பேறுவதில்லை. ஆனாலும், போஜன பாத்திரங்களை யெல்லாம் ஈயம் பூசி உபயோகிப்பது சிலாக்கியமானது. குத்துவிளக்கு முதலான தட்டுமுட்டுச் சாமான்கள் பித்தளையால் செய்யப்படுகின்றன.



## 18. திமிங்கிலம்

1. ஜீவ ஜந்துக்களில் மிகவும் பெரியது திமிங்கிலம். ஒரு திமிங்கிலம் நூறு அடி வரையில் நீளமுள்ளதாக வளரும். இது தண்ணீரில் மிதக்கும்போது ஒரு மிதவை போலத் தோன்றும்.

2. முன் ஒரு பாடத்தில் திமிங்கிலம் குட்டிபோட்டுத் தன் குட்டிக்குப் பால் கொடுக்கும் என்றும் நீர் மட்டத்துக்கு மேலே வந்துதான் மூச்சுவிடும் என்றும் படித்திருக்கிறீர்கள்.

3. திமிங்கிலம் சுவாசம் விடும்போது தன் நாசித் துவாரத்தால் ஜலத்தை வெளிப்படுத்தும். சில வேளைகளில் அந்தத் தண்ணீர் இருபது அடி உயரம் வரையில் எழும்பி விழும். அப்போது உண்டாகும் சத்தமும் அதிக தூரம் கேட்கும்.



4. திமிங்கிலத்துக்கு வாலில் பலம் அதிகம். வாலின் உதவியினால் ஒரு பெரிய படகையும் தாக்கி, அதில் உள்ள மனிதர்களோடு அதை ஆகாயத்தில் எடுத்து வீசும். இறால் மீன், நண்டு, கடற்பூச்சி முதலானவைகள் இதற்கு ஆகாரம்.

5. திமிங்கிலம் பசிக்கும்போது தன் வாயை அகல விரித்துக்கொண்டு வேகமாய் ஓடும். அப்போது அநேகம் பிராணிகள் ஜலத்தோடு வாயில் செல்லும். வாயை மூடிக்கொண்டதும் தண்ணீர் முழுவதும் அதன் கொடிறுகளில் உள்ள சந்துகளின் வழியாய் வெளிப்பட்டுப் போகும். பின்பு திமிங்கிலம் அந்தப் பிராணிகளை அப்படியே தின்றுவிடும்.

6. தண்ணீர் குளிர்ச்சியினால் உறைந்து கிடக்கின்ற வடக்கு, தெற்குக் கடல்களில் திமிங்கிலம் வாசம் செய்கிறது. இதன் கொழுப்புக்காகவும் எலும்புகளுக்காகவும் மனிதர்கள் இதை வேட்டையாடிப் பிடிக்கிறார்கள்.

7. திமிங்கில வேட்டை அபாயமானது. மழைகாலத்தில் கடல் நீர் உறைந்து கட்டியாயிருக்கும்போது வேட்டைக் கப்பல்கள் அசையாமல் மாதக்கணக்காக நின்றுவிடுவதும் உண்டு. திமிங்கிலத்தைக் கண்டதும் மனிதர்கள் கப்பலை

விட்டுப் படகுகளில் இறங்கித் தாங்கள் சித்தமாய் வைத்திருக்கும் எறி யீட்டிகளை அதன்மேல் எறிவார்கள்.

8. அந்த ஈட்டி ஒரு பெரிய கயிற்றுச் சுருளோடு இணைக்கப்பட்டிருக்கும். திமிங்கிலம் அந்த ஈட்டியை இழுத்துக் கொண்டு ஒரு மைல் வரையில் ஜலத்தில் முழுகி ஓடும். பின்பு மூச்சு விடுவதற்கு வெளியில் வந்ததும், கயிற்றின் உதவியால் அதைத் தொடர்ந்து சென்றவர்கள் மறுபடியும் ஈட்டிகளை முன்போலவே எறிவார்கள்.

9. இங்ஙனம் பலமுறை எறியப்படுகின்ற ஈட்டிகளால் குத்தப்பட்ட திமிங்கிலம் மரணம் அடையும் சமயத்தில் இரத்தத்தைக் கக்க ஆரம்பிக்கும். அப்போது படகுகள் அருகில் இருப்பது அபாயத்துக் கிடமாகும். வேட்டைக்காரர்கள் தங்கள் படகுகளை நெடுந்தூரத்தில் தள்ளிக் கொண்டுபோய் விடுவார்கள்.

10. இறக்கும் தருணத்தில் திமிங்கிலம் வாலால் தண்ணீரை அடித்து நெடுந்தூரம் வரையில் கலக்கி நுரைக்கும்படி செய்யும். அது இவ்வாறு மரணமடையும் சமயத்தில் செய்யும் செய்கைகளால் ஒரு பேரொலி உண்டாகும். அது இறந்தபின் அந்த ஒலி நின்றுவிடும். அதனால் அது இறந்துவிட்டதென்று தெரிந்துகொண்ட வேட்டைக்காரர்கள், அதை இழுத்துக்கொண்டுபோய்க் கப்பலின் பக்கத்தில் கட்டி அதன் கொழுப்பைப் பல பெரிய துண்டங்களாக வெட்டிப் பீப்பாய்களில் நிரப்பிக்கொண்டு போவார்கள்.

11. அறுபது அடி நீளமுள்ள ஒரு திமிங்கிலத்திலிருந்து சற்றேறக்குறையத் தொண்ணூறுபாரம் எண்ணெய் கிடைக்கும். திமிங்கிலத்தின் எலும்புகளால் சீப்பு, சிமிழ், கத்திப் பிடி, முதலான பல அலங்காரப் பொருள்கள் செய்யப்படுகின்றன.

## 19. உடல்

1. மனிதர்கள் நிலம், நீர், தீ, காற்று, மின்னல் முதலான சடப் பொருள்களைக் கொண்டு நினைக்கவும் முடியாத அரிய காரியங்களை யெல்லாம் செய்து முடிக்கிறார்கள். ஆனால், அவர்கள் உயிர் இருந்து வாழ்வதற்கு மாத்திரம் ஒரு இடம் உண்டாக்கிக்கொள்ள அவர்களால் முடிவ

தில்லை. எவ்வளவு பெரிய பண்டிதர்களானாலும் இந்த ஒரு விஷயத்தில் விழிக்கவேண்டியவர்களாய் இருக்கிறார்கள். இந்த ஒரு குறையை நிவர்த்தி செய்துகொள்வதற்கு எவர்களுக்கும் சக்தி கிடையாது.

2. ஏனென்றால், கடவுள் அந்தத் தொழிலை மாத்திரம் தாமே வைத்துக்கொண்டிருக்கிறார். அதை மனிதர்கள் ஆதீனத்தில் விட்டுவிடுவதற்கு அவருக்கு இஷ்டம் இல்லை. இனி அவர் தொழிலைக் கவனிப்போம்.

3. அவர் நமக்கு ஒரு சரீரத்தை உண்டாக்கிக் கொடுத்திருக்கிறார். இந்தச் சரீரந்தான் உயிர் இருந்து வாழ்வதற்கு இடம். இது உலகத்திலுள்ள ஆச்சரியமான எல்லா இயந்திரங்களையும்விட ஒப்பற்றஉயர்ந்த இயந்திரம். இந்தஇயந்திரத்தைத் தலை, உடல், கைகால்கள் என்று மூன்று பாகமாய்ப் பிரிக்கலாம். இந்தப் பாடத்தில் உங்களுக்குத் தலையைப் பற்றிச் சொல்கிறேன்.

4. ஒவ்வொரு மனிதனும் தன் உடம்பை அளந்து பார்ப்பானானால் அவன் கையினால் எட்டுச்சாண் இருக்கக் காண்பான். அதில் ஒரு சாண் தலை. உடம்பில் இந்தப் பாகம் தான் அதிக முக்கியமானது. உயிரின் தொழிலுக்கு அவசியமான இயந்திரங்களெல்லாம் இந்தத் தலைப்பாகத்தில் பொருந்தி யிருக்கின்றன.

5. நன்றாய்ப் பாருங்கள்; ஒரு மாடியில் இருப்பவன் மேல்நிலைப் பலகணிகளின் வழியாக வெளிப்புறத்தில் பார்க்கக்கூடியதுபோல ஆத்துமாவும் முகத்திலிருக்கிற கண்களின் வழியாய் நம்மைச் சுற்றிலுமுள்ள எல்லாவற்றையும் காண்கிறது. மாடியில் உள்ள கிழக்குப் பலகணியின் வழியாய் மேற்குத் திக்கிலிருக்கின்ற பொருள்களைத் தெரிந்துகொள்ள முடியாது. கடவுள் உயிருக்கென்று உண்டாயிருக்கின்ற பலகணி அப்படிப்பட்டதன்று. இது இருந்த இடத்திலேயே நாற்புறத்திலும் திரும்பிச் சுழன்று பார்க்கும். அதாவது ஆத்துமா நினைக்கிற பிரகாரம் நிமிரவும் குனியவும் வலம் இடம் திரும்பவும் தக்கபடி தலை அமைந்திருக்கின்றது. அதனால், நாம் நின்ற நிலையிலேயே நமக்கு நாற்புறத்திலும் உள்ள வஸ்துக்களைச் சுலபமாய்ப் பார்க்கலாம்.

6. இது அல்லாமல், பேசும் இயந்திரம், கேட்கும் இயந்திரம், முகரும் இயந்திரம், சுவை உணரும் இயந்திரம், அறியும் இயந்திரம் ஆகிய எல்லாம் தலைப்பாகத்தில்தான் இருக்கின்றன. பேசுவதும், சுவை தெரிவதும் நா. கேட்பது காது. முகருவது மூக்கு. அறிவது மூளை; இது கபாலத்துக்குள் இருக்கிறது; மனித சரீரத்தில் மிகவும் முக்கியமான பாகம் இதுதான்.

7. மூளையைக் கபாலம் பத்திரமாய்க் காப்பாற்றி வருகிறது. கபாலமானது மிக உறுதியாயும் அதிசயமாயும் இணைக்கப்பட்ட எட்டு எலும்போடுகளால் அமைந்திருக்கின்றது. அதிக உஷ்ணம் உறைக்காதபடி மயிர்கள் அடர்ந்து மூளைத்து அதை இரக்ஷித்துக்கொண் டிருக்கின்றன.

8. மனிதன் நிமிர்ந்து நடப்பதனுல் உலகவின்பத்துக்கு மேற்பட்ட பொருள்களைத் தேட யோக்கியதை உள்ளவன் என்றும், மற்றப் பிராணிகள் தரையை நோக்கி நடப்பதனுல் உலகப்பொருள்களை மாத்திரம் விரும்புந் தன்மையையுடையன என்றும் சொல்வதுண்டு.

9. மூளையிலிருந்து ஒவ்வொரு உறுப்புக்கும் இரத்தநாடிகள் ஓடிக்கொண் டிருக்கின்றன. நடக்கும்போது நம் காலில் ஒருசிறிய முள் தைத்துவிட்டால், அது இரத்த நாடிகளாகிய தந்திக் கம்பியின் வழியாக உடனே மூளைக்குச் செல்ல, மூளை வலியையும், பரிகாரம் செய்வதற்கு வேண்டிய முயற்சியையும் நமக்குத் தருகிறது. மூளையில் ஒவ்வொரு இரத்த நாடியும் நன்ருய்ப் பொருத்தப்பட் டிருக்கிறது.

10. இங்ஙனமே அந்த அந்த இடங்களிலுள்ள நரம்புகளின் மூலமாக மூளை உணர்ச்சியை உண்டாக்கி, பேசுவது, நடப்பது, உண்பது, உறங்குவது முதலான தொழில்களையெல்லாம் செய்விக்கின்றது.

## 20. ஸேவிங்க்ஸ் பாங்கு

1. ஒரு தினத்தைப் பகல் இரவு இரண்டும் சேர்ந்து நிரப்புகின்றதுபோலவே இந்தப் பெரிய உலகத்தைச் செல்வான்களும் ஏழைகளும் சேர்ந்து அலங்கரிக்கிருர்கள். எல்லாரும் பணக்காரர்களாகவாவது ஏழைகளாகவாவது இருக்க

முடியாது. செல்வவான்களுடைய வருமானம் அவர்கள் செலவுக்குக் கண்டு அதிகம் மிஞ்சுமாதலால் அவர்களைப்பற்றிக் கவலைகொள்ள வேண்டியதில்லை. ஏழைகளைப் பற்றித் தான் முதலில் கவனிக்கவேண்டும்.

2. ஏழைகள் பெரும்பாலும் தினக்கூலி அல்லது மாதச் சம்பளத்துக்கு உழைத்து வருகிறார்கள். இவர்களுக்கு உடம்பில் பலமிருக்கும்வரையில் சம்பளம் கிடைப்பது நிச்சயம். கிழப்பருவம் வந்தாலும் அல்லது நோயில் விழுந்தாலும் இவர்களை ஏனென்று கேட்பார் எவரும் இல்லை. இது வல்லாமல் குடும்பத்தில் கலியாணம் முதலான சுபாசுப கருமங்கள் இடைக்கிடை நேரிடுவது சகஜம். இந்த விசேஷச் செலவுகளுக்குப் பணக்காரர்களும் சில சமயங்களில் கஷ்டப்படுகிறார்களென்றால், ஏழைகளைப்பற்றிக் கேட்பானேன்?

3. ஆதலால், ஒவ்வொரு மனிதனும் அவசியமாய் நேரிடுகின்ற இப்படிப்பட்ட விசேஷச் செலவுகளுக்கென்று தன் வருமானத்தில் கொஞ்சம் கொஞ்சம் மிச்சப்படுத்தி வைத்துக்கொள்ள வேண்டும். ஏழைகள் வீடு எப்பொழுதும் பொருளைக் காப்பாற்றுவதற்குப் போதுமான பத்திர முள்ளதாயிராது. இதைத் தெரிந்துகொண்டுதான் துரைத்தனத்தார் இவர்கள் பொருட்டு ஒவ்வொரு தபாலாபீஸிலும் ஒவ்வொரு நிதியை ஏற்பாடு செய்திருக்கிறார்கள். இதற்கு ஸேவிங்க்ஸ் பாங்கு என்று பெயர்.

4. ஒவ்வொரு மனிதனும் தன் தன் சக்திக்குத் தகுந்தபடி மாதத்துக்கு அல்லது வாரத்துக்கு ஒரு முறை அதில் கொஞ்சம் பணத்தைப் போட்டு வைக்கலாம். இங்ஙனம் மிகுத்து வைப்பது சமய சஞ்சீவியாக அவர்கள் ஆபத்துக்கு ஒத்தாசை செய்யும். தபாலாபீஸர்கள், விடுமுறை நாட்கள் தவிர மற்ற ஆபீஸ் நேரங்களில் நாம் கொடுக்கும் பணத்தைப் பெற்றுக்கொண்டு ரசீது புஸ்தகம் ஒன்று நமக்குக் கொடுக்கிறார்கள்.

5. நாம் கொடுக்கும் தொகைகள் எல்லாவற்றையும் அந்தப் புஸ்தகத்திலேயே அப்பொழுதப்பொழுது பதிந்து புஸ்தகத்தை நம்மிடம் கொடுத்துவிடுகிறார்கள். நாம் கட்டிய பணத்துக்கு வருஷமொன்றுக்கு நூற்றுக்கு மூன்று ரூபாய்

வட்டியும் உண்டு. அடுத்த வருஷத்தில் வட்டியும் முதலோடு சேர்ந்து கணக்காகின்றது.

6. நாம் கட்டியிருக்கிற தொகையிலிருந்து சொற்ப பாகத்தையாவது அல்லது நேர்ந்திருக்கின்ற செலவுக்குத் தகுந்தபடி அதிக பாகத்தையாவது பெற்றுக்கொண்டு மறுபடியும் திருப்பிக் கட்டலாம். எத்தனை தடவை கொடுக்கல் வாங்கல் செய்தாலும் அலுத்துக்கொள்ள மாட்டார்கள். சந்தோஷமாய்ச் சமாதானம் சொல்லிக் கணக்கில் பதிவு செய்து அனுப்புவார்கள்.

7. ஒரு வருஷத்தில் ஒருவன் தன் பெயரால் 750 ரூபாய் வரையில் கட்டிவைக்கலாம். சர்க்கார் கணக்குக்கு ஏப்ரல் மாதம் முதல் மார்ச்சு மாதம் முப்பத்தோராவது தேதிவரையில் ஒரு வருஷம் ஆகும். இந்த நிதியில் புருஷனே கணக்கு வைத்துக்கொள்ள வேண்டும் என்கிற நியதி கிடையாது. பெண்களும் சிறு பிள்ளைகளும் தங்கள் பெயரால் கணக்கு வைத்துப் பணம் கட்டி வாங்கிக்கொண்டு வரலாம்.

8. இந்த நிதியில் பணம் கட்டுவதால் பணத்தைப் பத்திரமாய்க் காக்கவேண்டிய சிரமத்தையும், அன்றிப் போய்விடுமே யென்ற பயத்தையும் நாம் அடையவேண்டியதில்லை. இதன் ஏற்பாடு முழுவதும் சர்க்கார் பொறுப்பில் இருக்கின்றது. இந்த ஸேவிங்க்ஸ் பாங்குகள் ஏழைகளுக்கு எவ்வளவு அநுகூலமாயிருக்கிறது, பாருங்கள்.

## 21. விவாத நஷ்டம்

1. இரண்டு பூனைகள் கஷ்டப்பட்டு ஒரு தோசையைத் திருடிவந்தன. இரண்டுக்கும் பசி அதிகம். ஒரு பூனை தோசையை இரண்டாகப் பிட்டு மற்றொன்றைப் பார்த்து "நண்பனே! இதோ பார்! இரண்டும் சமமாய் இருக்கின்றன; இவற்றில் உனக்கு இஷ்டமான ஒன்றை எடுத்துக் கொள்" என்றது. அந்தப் பூனை சற்று நேரம் இரண்டு துண்டுகளையும் திருப்பித் திருப்பிப் பார்த்து "இது கொஞ்சம் அகலமாயிருக்கிறது, அது நீளமாயிருக்கிறது: இது கனம்; அது இலேசு; நீ சரியாய்ப் பாகிக்கவில்லை" என்று குறைசொல்லிற்று.

2. அந்தச் சமயத்தில் மரத்திலிருந்து ஒரு குரங்கு இறங்கி வந்தது. பூனைகள் "ஐயா! குரங்காரே! எங்கள் இருவருக்கும் ஒரு தோசை கிடைத்தது. அதைப் பங்கிட்டுக் கொள்வதில் இரண்டு பேரும் விவாதப்பட்டிருக்கிறோம்; நீர் அதைப் பங்கிட்டுக் கொடுக்கவேண்டும்" என்று இரண்டு துண்டையும் அதனிடம் கொடுத்தன.



3. குரங்கு, "பக்ஷபாதம் செய்வது மகாபாவம்; அநியாயமாய்த் தீர்ப்புச் செய்கின்றவனைக் கடவுள் தண்டனை செய்வார். நான் அதற்கு இடங்கொடாமல், இந்த இரண்டு துண்டுகளையும் தராசில் வைத்து நிறுத்துச் சம்மாய்ப் பங்கிட்டுத் தருகிறேன்" என்று ஒரு தராசு கொண்டுவந்து ஒவ்வொரு துண்டையும் ஒவ்வொரு தராசுத் தட்டில் வைத்து நிறுத்தது. ஒரு தட்டு, சிறிது மேல் ஏறியது; மறு தட்டு, சிறிது தாழ்ந்தது. குரங்கு பூனைகளை நோக்கி, இதில் எந்தத் துண்டு கனம்? என்று கேட்டது. பூனைகள் ஒரு துண்டைக் காண்பித்தன. குரங்கு அதில் கொஞ்சம் வாயில் கடித்துக்கொண்டு, இப்பொழுது பாருங்கள்; சரியாய் இருக்கிறதா?' என்றது. பூனை

கள் 'இல்லை; அது கனமானது' என்று மற்றொரு துண்டைக் காட்டின.

4. குரங்கு அதிலும் கொஞ்சம் கடித்துக்கொண்டு 'இப்பொழுது சரியாய் இருக்கும் என்று நினைக்கிறேன், பார்த்துச் சொல்லுங்கள்' என்றது. பூனைகள் 'மற்றொரு துண்டு அதிகம்' என்றன. வானரம், 'இது ஒரு அலுப்பு வேலை; ஒப்புக்கொள்ளவே கூடாது' என்று அவைகள் கேட்கும்படி சொல்லி, இரண்டு துண்டுகளையும் மாற்றி மாற்றிக் கடித்துத் தின்றுகொண்டே வந்தது.

5. அந்த அசட்டுப் பூனைகளும் அது கனம், இது கனம், என்று சொல்லிக்கொண்டே யிருந்தன. கடைசியில் அந்தப் பெரிய தோசைத் துண்டு இரண்டும் மிகவும் சிறிய துண்டுகளாக மாறின. அப்பொழுதுதான் பூனைகளுக்குப் புத்தி வந்தது.

6. பின்பு அவைகள் குரங்கை நோக்கி "வானரப் பிரபுவே எங்களுக்குப் புத்திவந்தது; நாங்கள் சமாதானமாய் விட்டோம்; கஷ்டப்பட்டுத் தேடிய பெரிய தோசையை அநியாயமாய்த் தின்றுவிட்டீர்; மிகுந்து இருக்கின்ற துணுக்குகளையாவது எங்களுக்குக் கொடுத்துவிடும்; நாங்கள் பெற்றுச் செல்கிறோம்" என்று கெஞ்சிக் கேட்டன.

7. குரங்கு சிரித்துக்கொண்டு "அவசரப்படவேண்டாம்; நான் சொல்வதை நிதானமாய்க் கேளுங்கள் : நியாயம் என்பது யாவர்க்கும் பொது; நான் இரை தேடுவதற்கு அவசரமாய்ச் சென்றேன்; நீங்கள் இருவரும் என்னைத் தடுத்துவிட்டீர்கள்; இத்தனை நாழிகை வரையில் உங்களைச் சமாதானம் செய்து பார்த்தேன்; உங்களுக்குத் திருப்தி உண்டாகவில்லை; இனி உங்கள் வழக்கு எனக்கு வேண்டாம். இதுவரையில் பிரயாசைப்பட்டதற்கு எனக்குக் கூலி கொடுத்துவிடுங்கள்; ஆனால், நீங்கள் ஏழைகள்; எனக்குக் கொடுப்பதற்கு உங்களிடத்தில் ஒன்றையும் காணோம்; வேறு யாராவது இந்த வழக்கைக் கொண்டுவந்திருந்தால் அதிகம் கேட்டிருப்பேன்; நான் பேராசைகொண்டவன் அல்லவாதலால் உங்கள் வழக்கில் வேலை செய்ததற்குக் கைக்கூலியாக இந்தச் சிறிய தோசைத் துண்டுகளை எடுத்துக்கொள்கிறேன்;

இனி வழக்குக் கொண்டுவரும்பொழுது கூலியை வேறுகக் கொடுத்துவிடுங்கள்; அது இரண்டு பெயருக்கும் நல்லது'' என்று அந்தத் துண்டுகள் இரண்டையும் வாயில் போட்டுக் கொண்டு போய்விட்டது.

## 22. மின்சாரம்

1. பிள்ளைகளே! நான் யார் தெரியுமா? என்னை அனைவரும் மின்னல் என்கிறார்கள். நான் காற்றைப்போல எங்கும் இருக்கிறேன். நான் இல்லாதவிடம் கிடையாது. ஆனால், ஒளிவிட்டுப் பிரகாசிக்கும்போதுதான் என் இருப்பு விளங்கும். நான் அடிக்கடி மேகங்களினிடையிலேயே மின்னலாய்ப் பிரகாசிப்பேன்.

2. நிலம் நீர் தீ காற்று முதலான எல்லாவற்றிலும் நான் நிறைந்திருக்கிறேன். நான் இரண்டு பொருள் ஒன்றாய்ச் சேரும்போதெல்லாம் வெளிப்பட்டுக் கொண்டிருப்பேன். ஆனால் அப்பொழுது உங்கள் கண்களுக்குத் தெரியமாட்டேன். நான் அதிகமாய் நிறைந்திருக்கிற பொருளோடு குறைவாயிருக்கிற ஒரு பொருள் வந்து சேர்ந்தால் அதனிடத்துக்குச் செல்லுவேன். பள்ளத்தை நாடித் தண்ணீர் செல்வதுபோலக் குறைவா யிருக்கின்ற பொருளை நாடிச் செல்வது எனக்கு இயற்கை: நான் செல்கின்ற வேகத்துக்கும் அளவுக்கும் தக்கபடி என் ஒளி உங்களுக்குக் காணப்படும். ஒரு மேகத்திலிருந்து மற்றொரு மேகத்துக்காவது மரம் மலை கடல் முதலான பொருளுக்காவது தாவும்போது மாத்திரம்தான் பலர் என்னைத் தெரிந்துகொள்கிறார்கள்.

3. நான் அதிகமாய் வெளிப்படும்போது ஒரு பெரிய நெருப்புக் கம்பியாவது, ஒரு பெரிய தீக்கொழுந்தாவது சரேலென்று பாய்வதுபோலக் காணப்படுவேன். அப்பொழுது நீங்கள் என்னைப் பார்க்கக்கூடாது. பார்த்தால் உங்கள் கண்கள் ஒளியிழந்து போகும். இமை நேரத்துக்குள்ளாகவே ஒரு வஸ்துவில் பாய்ந்து மறைந்துவிடுவேன். உங்கள் க்ஷேமத்தை உத்தேசித்தே நான் அப்படிச் செய்கிறேன்.

4. நான் இரண்டொரு நிமிஷம் நிலைத்து நின்றாலும் உலகம் ஒளியிழந்து போகும். பிறகு கண்ணிருந்தும் உங்களுக்குப் பார்வை தெரியாது. பிள்ளைகளே! நான் சும்மா

வெளிப்படமாட்டேன். உங்களுக்குப் பயம் தரும்படியான அதிக சத்தத்தைச் செய்துகொண்டுதான் பெரும்பாலும் வெளிப்படுவேன். என் சத்தத்தைக் கேட்டுச் சில சமயங்களில் சிலர் செவிடராவதுண்டு.

5. என் பாய்ச்சலுக்கு வேகம் அதிகம். ஒரு பிராணியினுலும் என் வேகத்தைத் தடுக்க முடியாது. நான் சமீபத்தில் தோன்றினுல் என் ஒளியோடு கூடவே உங்களுக்குச் சத்தமும் கேட்கும். என் சத்தத்துக்கு இடியோசை என்று பெயர்.

6. நான் வெளிப்படும்போது நீங்கள் ஜாக்கிரதையாயிருக்க வேண்டும். தண்ணீர்க் கரையிலாவது மாம் மலை கோபுரம் முதலான உயர்ந்த இடங்களிலாவது நீங்கள் ஒளிந்துகொள்ளக்கூடாது. ஜன்னல் ஓரங்களிலும் சுவர்களின் ஓரங்களிலும் படுக்கக்கூடாது. ஏனென்றுல், நான் சமயத்துக் கேற்றபடி அங்கெல்லாம் பாய்ந்து செல்வேன். என் சமீபத்திலாவது நான் செல்லும் மார்க்கத்திலாவது எதிர்ப்படுகின்ற எல்லாவற்றையும் நான் நாசமாக்கிவிடுவேன்.

7. அதிகமான தூரத்தில் நான் பாய்ந்து போனுல் என் ஒளியை மாத்திரம் காணமுடியுமேயன்றிச் சத்தத்தைக் கேட்கமாட்டீர்கள்.

## 23. கதைப் பாட்டு

1. திருவண் ணுமலை யென்றுசி றந்திடும்
பெருமை கொண்ட பெரும்பதி தன்னிலே
ஒருவன் கோயி லொதுக்கிலி ருந்தனன்
முருக னென்று மொழியும் பெயரினுன்.

2. மூவர் மக்கள் முதல்மனை யாளுக்கங்
காவ லோடிளை யாளொரு நாயகி
ஜீவ னத்துக்குச் செய்தொழி லின்றியே
பாவம் நாளும் பதைத்துவ ருந்துவான்.

3. பூத்து நீண்ட புவனம் படைத்துப்பின்
காத்த ளிக்கும் கடவுள் கருணையால்
வாத்தங் கொன்றவ் வறியவன் வாழ்க்கையைக்
காத்து நின்று களித்திடச் செய்யுமாம்.



4. கூட்டில் காலை குளிர்புனம் மேய்ந்தந்த
வீட்டில் தங்கி விளங்கும் பண் வாத்தது
போட்டியில் லாதபொன் முட்டை நாட்கொன்று
போட்டுத் தந்து புகழில் வளருமால்.

5. முட்டை கொண்டு முருகன் கடைத்தெருச்
செட்டி யார்கடை சென்று விலைசெய்து
கட்டு மாடையும் காய்கறிப் பண்டமும்
திட்ட மாய்க்கொண்டு ஜீவித்து வந்தனன்.

6. இந்த வண்ணம்நம் ஈசன் கருணையால்
தந்த ளித்திடும் தங்கநன் முட்டையால்
அந்த வூரி லமைவுடன் வாழ்ந்தனன்
சிந்தை தன்னில் சிறுவன்செய லுன்னியே.

7. இளைய நாயகி எப்பொழு தும்மனம்
உளையும் வண்ண முரைக்கவொண் ணுதசொற்
களைமொ ழிந்துதன் காதலன் துக்கமாய்க்
களைமி குந்து கலங்கிடச் செய்வளால்.

8. நாயும் வீதியில் நன்ருயு லாவித்தன்
தீயும் வெம்பசி தீர்த்துக்கொள் கின்றது.
பேயும் பத்துப் பெரும்பணி பூண்டிடும்
நீயும் ஆண்பிள்ளை நிற்கின்ரு யென்பளால்.

9. தங்க வாத்தைச் சரியாய் வளர்த்துநான்
இங்கு நாளு மிரண்டுமுட் டைகளைச்
சங்கடம் இன்றித் தான்பெற்றோர் முட்டையால்
அங்க மெங்கும் தங்கமாய்ப் பூணுவேன்.

10. என்று வாத்தை யிரண்டுதிங் கள்வளர்த்
தோன்றும்பொன் முட்டையுண்டாகக் கண்டிலள்
தின்று வந்தவத் தீனிக் கொழுப்பினால்
நின்று விட்டது நேர்ந்தமுன் பாவத்தால்.

11. உள்ள முட்டையு மோடி யொளித்திடுங்
கள்ளம் காணும் கருத்தொடு முருகனும்
குள்ள வாத்தின் குவிந்த வயிற்றினை
மெள்ளக் கீண்டு வெறுப்பொடு நோக்கினான்.

12. பாவி முட்டையைப் பார்த்திலன் வாத்துந்தன்
ஆவி நீங்கி யகன்ற விண்ணினில்
தீவி னைப்பல செய்தவர்க் கென்றுமே
ஆவ தெல்லாம் அழிந்திடு முண்மையே.

## 24. பல்



1. ஆகாரங்களை நன்றாய் மென்று தின்பதற்குக் கடவுள் நமக்கு ஒரு ஒப்பற்ற இயந்திரத்தைக் கொடுத்திருக்கிறார். அதைப் பல் என்று சொல்வார்கள்.

2. மனிதர்கள் பலவகையான உணவுகளை உட்கொள்வதனால், அவர்களுடைய பற்கள் நான்கு விதமாயிருந்து நான்கு தொழிலைச் செய்துவருகின்றன. கடிக்கும் பற்கள், கிழிக்கும் பற்கள், மெல்லும் பற்கள், அரைக்கும் பற்கள் என்று அவைகளுக்குப் பெயர்.

3. மனிதர்கள் ஒவ்வொருவர்க்கும் முப்பத்திரண்டு பற்கள் உண்டு. இவை மேல் வாயில் பதினாறும் கீழ் வாயில் பதினாறுமாக எதிருக்கெதிராய் முளைத்திருக்கும்.

4. கடிக்கும் பற்கள்:—முன்வாயில் மேலும் கீழுமாக ஒவ்வொரு பதார்த்தத்தையும் கடித்துத் துண்டம் செய்வதற்கு எட்டுப் பற்கள் இருக்கின்றன. இவைகள் அதிக

கருக்குள்ளவை. எதிருக்கெதிரா யிருப்பதனால் கத்தரிக் கோலைப்போல, பதார்த்தங்களை எளிதில் துண்டம் செய்து விடும்.

5. கிழிக்கும் பற்கள்:—இவற்றுக்கு நாய்ப் பற்கள் என் றும் பெயர். இவை கடிக்கும் பற்களுக்குப் பக்கத்தில் ஒவ் வொன்றாக மொத்தம் நான்கு பற்கள் இருக்கும். மாமிசம் முதலான வலிய பதார்த்தங்களை எளிதில் கிழித்துக்கொடுக் கும். இந்த நான்கும் வேலின் முனையைப்போலக் கூராய் இருக்கும்.

6. மெல்லும் பற்கள்:—இவை நாய்ப் பற்களை ஒட்டிப் பக்கங்களுக்கு இரண்டிரண்டாக மொத்தம் எட்டுப்பற்கள் இருக்கும். இவற்றின் தொழில் துண்டமிட்ட, அல்லது கிழித்த, பதார்த்தங்களை மென்று கொடுப்பது.

7. இனிப் பெரிய கடைவாய்ப் பற்கள் மொத்தம் பன்னிரண்டு. இந்தப் பற்கள் பக்கத்துக்கு மும்மூன்றாக முளைத்து வளர்ந்து காணப்படும். பதார்த்தங்களைப் பஞ்சு போல் அரைத்து விழுங்குவதற்கு யோக்கியமுள்ளன வாய்ச் செய்துகொடுப்பது இவற்றின் தொழில். கடை வாய்ப் பற்கள் மேடும் பள்ளமுமாக இருப்பதனால்தான் அவை ஆகாரங்களை எளிதில் மெல்லவும் அரைக்கவும் ஏற்ற வையாயிருக்கின்றன.

8. பற்கள் தொழில் செய்வது ஆச்சரியமா யிருக்கும். மேல்வாய்ப் பற்களின் மேடு அடிவாய்ப் பற்களில் உள்ள பள்ளத்திலும் அடிவாய்ப் பற்களின் மேடு மேல்வாய்ப் பற்களில் உள்ள பள்ளத்திலும் நன்றாய்ப் பொருந்தும்படி அவ் விருவகைப் பற்களும் அமைந்திருக்கின்றன. அவை கள் அப்படி அமைந்திருப்பதனால்தான் ஆகாரங்களை நன் றாய் அரைத்து விழுங்குவதற்கு அநுகூலமாகும்படி பக்கு வப்படுத்துகின்றன.

9. பற்கள் தொழில் செய்யும்போது வாயில் உமிழ்நீர் வேண்டுமான அளவு சுரந்து அவற்றுக்கு உதவிசெய் கின்றது. தொழில் செய்வதனால் அடிக்கடி தேய்ந்து போகாமல் இருப்பதற்குப் பளபளப்பான மெழுகுபோன்ற சத்து ஒன்று பற்களை மூடிக்கொண்டிருக்கும்.

10. பற்களின் வேர்கள் தாடை எலும்புகளில் நன்றாய்ப் புதைந்துள்ளன. பாதி பாகத்துக்கு மேலும் சதைகள் வளர்ந்து அவற்றைக் காப்பாற்றிவருகின்றன. இல்லாவிட்டால் அவைகள் தொழில்செய்யும்போது நமக்கு நோவுண்டாகும்.

11. குழந்தைப் பருவத்தில் பால் முதலான திரவபதார்த்தங்களே உணவாயிருப்பதனால், அப்போது பற்கள் அவசியம் இல்லை. அந்தப் பாகத்தில் சதை மூடிக்கொண்டு சப்பிச் சப்பி உறிஞ்சுவதற்கு அநுகூலமாயிருக்கும்.

12. பருவம் ஏறஏற முத்துப்போன்ற பற்குருத்துக்கள் முளைத்து வளரும். ஆனால் இளமைப் பருவத்தில் முளைக்கின்ற பற்கள் ஏழு எட்டு வருஷங்களுக்கு அதிகமாக இருக்க மாட்டா. அவைகள் அடியோடு விழுந்து அந்த இடத்தில் பலமான வேறு பற்கள் முளைத்து வளர்ந்துவரும்.

13. இந்தப் பற்கள்தான் ஆயுள்காறும் இருந்து வேலை செய்யும் பற்களைத் தினமும் தேய்த்துக் கழுவிச் சுத்தமாய் வைத்துக்கொண் டிருக்கவேண்டும். இல்லாவிட்டால் பளபளப்பான மேற்பூச்சு கெட்டுச் சொத்தை பிடித்துச் சீக்கிரத்தில் விழுந்துபோகும்.

## 25. கல் மழையும் உறை பனியும்

1. மழைத்துளிகள் மேகத்திலிருந்து கீழே விழும்பொழுது மிக விரைவில் உண்டாகின்ற அதிக குளிர்ச்சியினால் சில சமயங்களில் இறுகிப்போகும். அவற்றை ஆலங்கட்டி அல்லது கல் மழை என்று சொல்வார்கள்.

2. கல் மழை கால் மணிக்கு அதிகமாய்ப் பெய்வதில்லை. ஒவ்வொரு கல்மழைத்துளியும் சாதாரணமாகப் பெரிய பட்டாணியின் அளவுடையதாக நிலத்தில் விழும். ஆனால், சில இடங்களில் மூன்று நான்கு அங்குல கனமுள்ள ஆலங்கட்டிகளும் விழுந்திருக்கின்றன.

3. கல்மழை பெரும்பாலும் கொஞ்சதூரம்தான் பொழியும். சில வருஷங்களுக்கு முன்பு வட அமெரிக்காவில் இரண்டுநாள் வரையில் கல்மழை விடாமல் பொழிந்ததென்று சொல்கிறார்கள். இந்தியாவில் இந்தக் கல் மழை வெகுவாய்க் கோடைக்காலங்களில்தான் பெய்கின்றது.

4. இது அதிகப் பருமன் உள்ளதாக விழுமானால், நிலத்தில் வசிக்கின்ற சிறிய ஜந்துக்களுக்கும் பயிர் வகைகளுக்கும் அதிக நஷ்டம் உண்டாகும். சில இடங்களில் அறுக்கும் தருணத்திலிருக்கின்ற பயிர்களில் கல் மழை பொழிந்து தானியமணிகளை உதிர்த்து நாசப்படுத்துகின்றது. இதனால், வேளாளர்கள் அதிக நஷ்டமடைகிறார்கள்.

5. நீராவி யணுக்கள் மழைத் துளியின் வடிவத்தைப் பெறுமலே இறுகிவிட்டால், உறைபனியாய் விடும். ஆலங்கட்டியென்பது அதிக குளிர்ச்சியினால் இறுகிப்போன மேகம் பொழிகின்ற நீர்த்துளியே யொழிய வேறல்ல. உறைபனி என்பது மழைத்துளியின் வடிவத்தைப் பெறுமலே இடையில் இறுகிவிடும் நீராவி அணுக்கள். இவைகளே இவ்விரண்டுக்கும் உள்ள வித்தியாசம்.

6. மாரிகாலத்தின் இறுதியில் உறைபனி பெய்ய ஆரம்பிக்கும். குளிர்ச்சியான தேசங்களில் அதிகமாய்ப் பெய்யும்; அங்கு அநேக நாள்கள் வரையில் விடாமல் பெய்து மரம் முதலியவைகளை மூடிக்கொண்டிருக்கும்.

7. கடலிலும் நீர் நிலைகளிலும் உறைபனி பெய்து பனிக்கட்டிகளாகி மாதக்கணக்காகத் தண்ணீரில் மிதக்கும். பின்பு சூரிய உஷ்ணத்தினாலும் பூமியின் உஷ்ணத்தினாலும் உருகிக் கரைந்து தண்ணீராக மாறும். மலைகளில் தங்கிக் கிடக்கின்ற இந்தப் பனிக்கட்டிகள் சூரியவெப்பத்தினால் உருகி நாற்புறத்திலும் அருவியாய்ப் பெருகுகின்றன.

8. இந்தியாவுக்கு வடக்கெல்லையா யிருக்கின்ற மலைத்தொடருக்கு இந்த உறைபனியினால்தான் இமாசலம் என்னும் பெயர் உண்டாயிற்று. (இமம் - பனி; அசலம் - மலை.) அந்த மலையில் ஆயிரத்தைந்நூறு அடி உயரத்துக்குமேல் உறைபனி எப்பொழுதும் கனமாய் மூடிக்கொண்டிருக்கின்றது. இந்தப் பனி சிறிது சிறிதாகக் கரைவதனால்தான் அங்கு உற்பத்தியாகின்ற கங்கை, யமுனை, பிரமபுத்திரா, ஸிந்து முதலான நதிகளில் வருஷம் முழுவதும் தண்ணீர் இடைவிடாமல் பெருகிக்கொண்டிருக்கின்றது.

9. தென்னிந்தியாவில் இயற்கைப் பனிக்கட்டிகளைப் பார்க்கமுடியாது. இயந்திரங்களால் உண்டாக்கப்படுகின்ற

செயற்கைப் பனிக்கட்டியைத்தான் காணலாம். உஷ்ண காலங்களில் பனிக்கட்டியைச் சில பானவகைகளில் கலந்து சாப்பிடுகிறார்கள்.

## 26. உண்மை—I

1. ஒரு மாது தன்மரணகாலத்தில் புத்திரனைக்கூப்பிட்டு, "குழந்தாய், திருவேங்கடம்! இப்பொழுது நான் இறக்கப் போகிறேன். யமதூதன் என்னை அழைத்துச்செல்ல வந்திருக்கிறான். இறக்கும் காலத்தில் எவரும் மனக்குறை கொள்ளக்கூடாது. நீ ஒரு உறுதி சொன்னால் நான் சந்தோஷமாய் இறப்பேன்" என்றாள். புத்திரன் "அம்மா! உங்கள் சந்தோஷத்தின்பொருட்டு நான் என்ன செய்யவேண்டுமென்பதைச் சீக்கிரம் சொல்லுங்கள்" என்றான். தாய் "குழந்தாய்! நீ பொய் சொல்லாதிருக்க வேண்டும்; இதுதான் என் விருப்பம்" என்று கூறினாள். திருவேங்கடம் "அப்படியே செய்கிறேன்" என்று தன் தாய்க்கு உறுதிமொழி கூறியதும் அவள் மரணமடைந்துவிட்டாள்.

2. பின்பு அவன் தன் தாய்க்குச் செய்யவேண்டிய கடமைகளை யெல்லாம் ஒழுங்காய்ச் செய்து பின் தன் தாய் இறந்த துக்கத்தினாலும், வேறு ஒருவரும் திக்கில்லாத காரணத்தினாலும் கொஞ்ச காலம் வரையில் ஒன்றும் செய்யத் தோன்றாமல் வீட்டிலேயே இருந்துவிட்டான். அவன் அதிக ஏழையாதலால் உழைக்காமல் சாப்பிடுவதற்கு அவனால் முடியாது; உழைத்தே உண்ணவேண்டியிருந்தது. அதனால், என்ன தொழில் செய்யலாமென்று சிலநாள் வரையில் எண்ணிப் பார்த்தான். அவனுக்கு ஒன்றும் தோன்றவில்லை. சாப்பாட்டுக்குக் கொஞ்சமும் இல்லாமற் போகவே, அவசரத்துக்குத் திருட்டுத்தொழில் செய்து வயிறு வளர்க்கத் தீர்மானம் பண்ணிக்கொண்டு, ஒருநாளிரவு அரண்மனைப் பொக்கிஷத்தில் திருடுவதற்காக ஒருசந்து வழியில் நுழைந்து போனான்.

3. அன்று எளிய வேடம் பூண்டு பட்டணம் பார்க்கச் சென்ற அந்த நாட்டின் அரசன் தற்செயலாய் அவனைச் சந்தித்தான். அரசன் அவனை நோக்கி, "தம்பி! நான் வேற்றூரான், பிழைக்கும் வழி தெரியாமல் விழிக்கிறேன்" என்று

சொல்லி, "நீ எங்கே போகிறாய்?" என்று கேட்டான். திருவேங்கடம், "நான் அரண்மனையில் திருடப் போகிறேன்" என்றான். அரசன் "தம்பி! அங்கு ஏராளமாய்ப் பொருள் கிடைக்கும்; என்னையும் உன்னோடு சேர்த்துக்கொள்; நாம் இருவருமாய்ச் சேர்ந்து அதிகப் பொருளை எடுத்துவரலாம்; உனக்கு இஷ்டமான பாகத்தைக் கொடு; பெற்றுக்கொள்கிறேன்" என்று கூறினான்.

4. திருவேங்கடம் சற்று யோசனை செய்து "நல்லது, கடவுள் இருக்கிறார்; நீயும் வா?" என்று அழைத்துக்கொண்டு போனான். அவர்கள் சென்ற சந்துவழியானது அரண்மனையின் ஒரு புறத்தில் நின்றுவிட்டது. அங்கு இருவரும் சேர்ந்து ஒரு சுவரில் கன்னம் வைத்தார்கள். பின்பு திருவேங்கடம் தன் கூட்டாளியை நோக்கி "நண்பனே! நீ இங்கே நின்றுகொண்டிரு; நான் உள்ளே நுழைந்து கிடைத்ததை எடுத்துவருகிறேன்" என்று அவனை நிறுத்திவிட்டுத் தான் மாத்திரம் கன்னம் வைத்த துவாரத்தின் வழியே புகுந்து உள்ளே போனான்.

5. அது ஒரு படுக்கையறை. அங்கு மேஜையின் மீது ஒரு சிறிய தந்தப்பெட்டி இருந்தது. அதன் திறவுகோலும் அங்கேயே வைக்கப்பட்டிருந்ததால், அவன் அதைத் திறந்து பார்த்தான். அதில் மூன்று இரத்தினங்கள் இருந்து பிரகாசித்தன. திருவேங்கடம் அவற்றில் இரண்டை எடுத்துக்கொண்டு பெட்டியை முன்போலவே பூட்டி வெளியில் வந்து சேர்ந்தான்.

6. அதுவரையில் பொறுமையுடன் காத்துக்கொண்டிருந்த அவன் கூட்டாளி "தம்பி! ஏன் சும்மா திரும்பிவிட்டாய்? ஒன்றும் கிடைக்கவில்லையோ?" என்று கேட்டான். அதற்குத் திருவேங்கடம் "நண்பனே! பொருள் கிடைக்காவிட்டாலும் இரண்டு இரத்தினங்கள் கிடைத்தன. இதோ அந்த இரத்தினங்கள் என் கையில் இருக்கின்றன. இவை மிக்க விலைபெறக்கூடியவை. இவற்றில் உனக்கு இஷ்டமான ஒன்றை நீ எடுத்துக்கொள்" என்றுகொடுத்தான்.

7. அக்கூட்டாளி "இரண்டுக்குமேல் கிடைக்கவில்லையா?" என்று வினவினான். திருவேங்கடம் "பெட்டியில் மூன்று இரத்தினங்கள் இருந்தன; எனக்கு அந்த மூன்றையும் எடுத்

துக்கொண்டுவர மனம் இல்லை; பாவம், எத்தனை நாள் வருந்திப் பாடுபட்டு அந்த இரத்தினங்களைச் சம்பாதித் திருப்பார்களோ? ஆதலால், அவர்களுக்கொன்றை வைத்து விட்டு இரண்டை எடுத்துக்கொண்டு வந்தேன்" என்றான்.

8. அரசன் அவனது கபடமற்ற பேச்சைக்கேட்டு அளவுகடந்த சந்தோஷமடைந்து அவனை இராஜவீதி வரையில் அழைத்துவந்து "தம்பி! உன்னைக் கடவுள் காப்பாற்று வார்; தொழில் கிடைக்காமல் தவித்துக் கொண்டிருந்த எனக்கு ஓர் இரத்தினத்தைக் கொடுத்துக் காப்பாற்றினாய்; என்னை மறந்துவிடாதே; நாளைய தினமும் உன் வீட்டுக்கு வருகிறேன்" என்றான். திருவேங்கடம் "நண்பனே! என் வீட்டுக்கு வருவதை வேண்டாமென்று தடுக்கவில்லை; ஆனால் இனிமேல் நான் திருடுவதற்குப் போகமாட்டேன்; ஏனென்றால், இந்த இரத்தினத்தை விற்றால், என் ஆயுள்காறும் செலவுக்குக் காணும்; இனி உன் இஷ்டமான இடத்துக்கு நீ போகலாம்" என்று அவனை அனுப்பிவிட்டு வீடு போய்ச் சேர்ந்தான்.

## 27. கதைப் பாட்டு

1. எனக்குன் இருபதம் நினைக்க வரமருள்
இனித்த தசரதன் தனக்கு மகனெனும்
மனத்தி னுடனவ தரித்து முனிவரன்
மகத்தி லரக்கியை வதைத்த வரசே.

2. நடக்கை யிலேயக லிகைக்கு க்ருபைசெய்து
நடத்திச் சனகன்வில் ஒடித்துச் சனகிகைப்
பிடித்துப் பரசுரா மனுக்கு மமதையைப்
பிரித்து நகரில்வந் திருக்கு மையனே.

3. தரிக்கு முடிபர தனுக்கு தவிநதி
நடத்திய குகனுட னடுத்துச் சித்ரகூட
வரைக்குள் சனகியோ டிருக்கத் துணைவனல்
வணக்கம் செயமகிழ் குணக்குஞ் சரமே.

4. துடித்த பரதனு மொடுக்க முடன்வரத்
தொடுத்த மிதியடி கொடுத்த ரசுசெய
வடக்கி லவனையும் விடுத்து நடுவிலே
வனத்தில் வரும்விரா தனைக்கொன் றவனே.

5. விடுக்க ரியஜடா யுவுக்கு றவுசொலி
விடுத்துக் கொண்டுபஞ்ச வடிக்குச் சென்றவுடன்
அடுத்த சூர்ப்பநகி தொடுத்த கரதூ
ஷணத்ரி சிரர்முடி துணித்த ராகவா.

6. நினைத்து வருமா ரீசனைக்கொன் றொருகவந்
தனுக்க ருளியநு மானைக்கண் டொருசுக்ரீ
வனுக்குதவி வாலி தனைப் பொருதுவா
னரப் படையைா தரித்த துரையே.

7. இருக்கு மறுமன்வந் துரைக்க நிசிசரர்
இருக்கை யறிந்தபி னெரிந்த கடலிலே
பெருக்க வினைசெய்து வருக்கம் வருக்கமாய்ப்
பெலத்த வரக்கரைத் தொலைத்த தெய்வமே.

8. கொடிய விந்த்ரசித்தன் ப்ரஹலாதன் முதலாகக்
கொள்ளு மூலபல வெள்ள வரக்கர்தம்
முடியுங் கும்பகர்ணன் முடியும் ராவணன்
முடியும் பொடியாக விடுபுங் கவனே.

9. நினைத்த படிவிபீ ஷணற்கர சுபெற
நிறுத்தி யொருபுஷ்ப ரதத்திலேறி வந்து
தனத்தி லுயர்தரு மயோத்தியிலே சிங்கா
தனத்தி ருக்கும்ரகு குலக் குமரனே.
(எனக்குன் இருபதம் நினைக்க வரமருள்.)

## 28. உருளைக்கிழங்கு

1. இது மழை ஏராளமாய்ப் பெய்கின்ற நீலகிரி போன்ற பிரதேசங்களுக்குத் தகுதியான பயிர். முயற்சியினால் மற்ற இடங்களிலும் பயிர் செய்யலாம். பெங்களூர் முதலான இடங்களில் இப்பொழுது இதை விசேஷமாய்ப் பயிர் செய்து வருகிறார்கள்.

2. இதற்கு மணல் கலந்த நடுத்தரமான களிமண் பூமி சிறந்தது. நிலம் கெட்டியா யிருக்கக்கூடாது. புல புல வென்று மெதுவா யிருக்கவேண்டும். பாயவிடுகின்ற தண்ணீரை அப்போதைக்கப்போது வடித்துவிடுவதற்கு ஆழ

மான வடிகால்கள் இருக்கவேண்டும். வடிகால்கள் இல்லாமல் இந்தப் பயிரைச் சாகுபடி செய்ய முடியாது.

3. நிலத்தை ஆழ உழுவது இந்தப் பயிருக்கு அத்தியாவசியமானது. ஒரு ஏக்கருக்குப் பதினைந்து முதல் இருபது வண்டிவரையில் நன்றாய் மட்கின தொழு எருப்போட வேண்டும். ஆமணக்கு, குசும்பா, கடலை முதலானவைகளின் பிண்ணாக்குகளைப் போடுவதும் நல்லதுதான்.

4. நம் நாட்டில் கரும்பு, கருணை, மஞ்சள் முதலான பயிர்கள் செய்வதற்குக் கிடங்கு அல்லது அகழிகளை அமைப்பதுபோல் உருளைக்கிழங்கு பயிர் செய்வதற்கும் அகழிகள் அமைக்க வேண்டும். பூராக் கிழங்குகளையாவது முளைக் கண்கள் இருக்கும்படியாகக் கத்தரித்த துண்டுக்கிழங்குகளையாவது அடிக்கு ஒன்று வீதம் நடவேண்டியது. ஒரு வாரத்தில் சிறிய முளைகள் வெளியில் காணப்படும். ஒரு ஏக்கர் நிலத்துக்குத் துண்டுகிழங்குகளானால் 1,300 முதல் 1,600 ராத்தல் வரையிலும், முழுக்கிழங்குகளாயிருந்தால் 2,240 ராத்தல் வரையிலும், முளைக்கிழங்குகள் வேண்டியிருக்கும்.

5. பயிர் நன்றாய் வளர்ந்து நிலத்துக்கு நிழல் தருமட்டும் அடிக்கடி கொத்தியும் களைபிடுங்கியும் பாதுகாக்க வேண்டும். பின்பு இரண்டு தடவை மண் அணைக்கவேண்டும். கடைசியாய்க் களை யெடுத்தபிறகு ஒருதடவை மண் அணைத்து அப்படியே விட்டுவிடலாம். பயிரினுடைய தாளும் இலையும் பழுத்து உதிர்வதற்கு ஆரம்பித்தால் கிழங்கு பூர்த்தியான வளர்ச்சியைப் பெற்றுவிட்டதென்று தெரிந்துகொள்ள வேண்டும். இந்த அடையாளம் ஐந்து மாதத்துக்குப் பிறகுதான் காணப்படும்.

6. கிழங்குகளை முழுவதும் வெட்டி யெடுத்த பின்பு அவற்றின் தாள்களும் இலைகளும் எருவாக உபயோகப்படுகின்றன. இந்தப் பயிரில் முக்கியமாய்க் கவனிக்கவேண்டிய விஷயங்கள் சில உண்டு. அவை நன்றாய் முற்றிய கிழங்குகளைப் பொறுக்கி யெடுத்து நடுவதும், வெட்டும்போது நோய்ப்பட்ட கிழங்குகளைச் சேர்க்காமல் அப்புறப்படுத்துவதும்தான்.

7. இந்தப் பயிருக்கு வியாதிகள் அதிகம். முன் சொத்தை, ஐரிஷ் சொத்தை, மோதிர நோய், சொறி என்பன அந்நோய்களின் பெயர். மஞ்சள் புள்ளிகளை உண்டாக்குவதும், பயிரை வாடச்செய்வதும், மஞ்சள் புள்ளிகளோடு பயிருக்கு நாற்றம் உண்டாக்குவதும், கிழங்கின்மேல் சொறி சிரங்கைப்போலத் தழும்புகள் காணப்படுவதும் இவற்றுக்கு அடையாளம்.

8. இந்த அடையாளமுள்ள பயிர்களைக் கண்டுபிடித்து அவைகளை அடியோடு பிடுங்கி எறியவேண்டும். இல்லாவிட்டால் இவ் வியாதி எல்லாப் பயிர்களுக்கும் உண்டாகிப் பெரிய நஷ்டத்தை உண்டுபண்ணிவிடும். பெரும்பாலும் மஞ்சள் நிறமான கிழங்குகளை நடுவதனுல் இந்த நோய்கள் உற்பத்தியாகின்றன.

9. உருளைக்கிழங்கு உடம்புக்குப் புஷ்டியையும் பலத்தையும் உண்டுபண்ணுகின்ற ஒரு நல்ல ஆகாரம். கரும்பு கருணை முதலான பயிர்களைப்போலவே உருளைக்கிழங்கும் அதிகமான லாபம் கொடுக்கும். மலையாளத்திலும் சேலம் ஜில்லாவிலும் இப்பொழுதுதான் இதைப் பயிர்செய்து வருகிறார்கள்.

## 29. உண்மை—II

1. அரசன் படுக்கையறை சென்று பார்க்கையில் ஒரு இரத்தினம் அப்படியே வைக்கப்பட்டிருந்தது. உடனே வெளியில் வந்து தன் மந்திரியை வரவழைத்து, "அமைச்சரே! என் படுக்கையறையில் திருடன் நுழைந்ததாய்க் கனவுகண்டேன்; எனக்கு உடம்பு ஜுரம் கண்டிருக்கிறது; எழுந்துபார்க்க முடியவில்லை; நீர் சென்று பார்த்துவாரும்" என்று அனுப்பினுன்.

2. மந்திரி பெட்டியில் ஒரு இரத்தினம் மாத்திரம் இருப்பதைக் கண்டு 'புத்தியற்றவன்; மூன்றில் ஒன்றை வைத்துப் போயிருக்கிறுன்; நமக்கு நல்லகாலந்தான்' என்று கருதி அந்த ஒன்றைத் தான் எடுத்து மடியில் வைத்துக்கொண்டு அரசனைக் கண்டு "அண்ணலே! திருடன் உளவறிந்தவன் போலக் காண்கிறது; மூன்று இரத்தினங்களையும் எடுத்துக் கொண்டு போய்விட்டான்" என்று கூறினுன்.



3. அரசன் திடுக்கிட்டு "ஐயோ! மூன்றையுமா எடுத்துக் கொண்டு போய்விட்டான்? ஒன்றுகூட வைக்கவில்லையா?" என, மந்திரி, "பிரபு! வந்தவன் திருடனல்லவா? ஒன்றை மாத்திரம் வைத்துவிட்டுச் செல்வானு? மூன்றையும்தான் கொண்டுபோயினுன்; நான் சீக்கிரம் அவனைக் கண்டு பிடித்து இரத்தினங்களைக் கொண்டுவரச் செய்கிறேன்" என்று கூறினுன். அரசன் "நாளைப் பகலுக்குள் கண்டு பிடித்துவாரும்" என்று கட்டளையிட்டு மந்திரியின் தாழ்ந்த குணத்தை யுணர்ந்து அவனிடம் அருவருப்படைந்தான்.

4. மந்திரி தன்னுலானமட்டும் இரண்டு நாள் பிரயத்தனம் செய்தும் திருடன் வெளிப்படவில்லை. மூன்ருவது நாள் திருவேங்கடம் தான் கொண்டுவந்து வைத்திருந்த இரத்தினத்தை ஒரு காசுக்கடையில் விற்கச் சென்றுன். கடைக்காரன் இரண்டாயிரம் ரூபாய்க்கு அதைப் பெற்றுக்

கொண்டு இன்னம் எத்தனை இரத்தினங்கள் இருந்தாலும் தன்னிடமே கொண்டுவரவேண்டும் என்று சொன்னான்.

5. திருவேங்கடம் "ஐயா! இரண்டு இரத்தினங்கள் கிடைத்தன. அவற்றுள் ஒன்றை நான் எடுத்துக்கொண்டு மற்றொன்றை என் பாகஸ்தனுக்குக் கொடுத்துவிட்டேன்" என்றான். "இவ்வளவு உயர்ந்த இரத்தினத்தை எப்படிச் சம்பாதித்தாய்?" என்று கேட்டான் கடைக்காரன். திருவேங்கடம் உண்மையைக் கூறினான். அதைக் கேட்ட கடைக்காரன் பயந்து அவனை அரசனுடைய சேவகர்களிடம் ஒப்புவித்து விட்டான்.

6. அவர்கள் அவனை அரசனிடம் அழைத்துக்கொண்டு போனார்கள். அரசன் திருவேங்கடத்தை "நீ யார்? இந்த இரத்தினம் உனக்கு எப்படிக் கிடைத்தது?" என்று கேட்டான். அவன் உண்மையை உள்ளபடியே கூறினான். அரசன் மந்திரியை விசாரிக்கையில் அவன் "அண்ணலே! திருடர்களுக்குப் பொய் தாய்வீடு; மூன்றையும் இவன் தான் எடுத்திருக்க வேண்டும்; கேட்கும் விதத்தில் கேட்டால் உண்மையை ஒப்புக்கொண்டு விடுவான்" என்று சொன்னான்.

7. அரசன் "திருவேங்கடம்! உன்னிடம் இரத்தினம் பெற்றுக்கொண்டுபோன மனிதனை இப்பொழுது கண்டு பிடித்துச் சொல்ல முடியுமா?" என்று கேட்டான். அவன் "ஐயா! கண்டுபிடிக்கலாம்; ஆனால், கொஞ்சம் சந்தேகமும் பயமும் உண்டாகின்றது" என்று சொன்னான். அரசன் "பயப்படாதே; உண்மையைச் சொல்" என திருவேங்கடம் "அண்ணலே, என் கண்கள் என்னை மோசம் செய்யாமலிருந்தால் தாங்கள்தான் என்னுடன் கூட்டாளியாயிருந்து இரத்தினம் பெற்றுப்போனவர் என்று கூறுவேன்; ஆனால் தாங்கள் அரசரா யிருக்கிறீர்களே; எப்படிச் சொல்லுவேன்!" என்றான்.

8. பக்கத்திலிருந்த மந்திரி உடனே எழுந்து அவன் கன்னத்தில் பளீரென்று அறையப்போனான். சபையிலுள்ளவர்களும் "இந்தத் திருடன் மகா துஷ்டனா யிருக்கிறான்; இவனை எளிதில் விடக்கூடாது" என்று கூக்குரலிட்டார்கள். அரசன் மந்திரியைத் தடுத்துத் "திருவேங்கடம்! நன்றாய்

நிதானித்துப் பார்! நான் உனக்குக் கூட்டாளியாயிருந்து என் அரண்மனையிலேயே உன்னைத் திருடச்செய்வதில் எனக்கு என்ன லாபம்?" என்றான்.

9. திருவேங்கடம். "அண்ணலே! இதற்கு விடை சொல்வதற்கு என்னால் முடியாது; கூட்டாளி என்னிடம் இரத்தினம் பெறும்பொழுது அவன் வலதுகையில் ஒரு வெட்டுத் தழும்பு இருந்ததைக் கவனித்திருக்கிறேன்; இப்பொழுது அந்தத் தழும்பு தங்களிடத்தில் காணப்படுவதோடு குரல், முகஜாடை முதலியவற்றிலும் தாங்கள் அவனை முழுவதும் ஒத்து விளங்குகிறீர்கள்; ஒருசமயம் தாங்களா யில்லாவிட்டால் தங்களைப்போன்ற வேறொரு மனிதனாவது பெற்றுப் போயிருக்கவேண்டும்" என்று நிதானமாய்க் கூறினான்.

10. அரசன் தன் சட்டைப்பையிலிருந்த ஒரு இரத்தினத்தை எடுத்து அவன் கையிற் கொடுத்துத் "திருவேங்கடம்! நீ உன் கூட்டாளிக்குத் தந்தது இதுதானா என்று பார்!" என்றான். அவன் மிகவும் மகிழ்ந்து "அண்ணலே! ஆம் இதுதான்; சந்தேகமில்லை; கூட்டாளியாயிருந்து என்னிடம் இரத்தினம் பெற்றுப்போனவர் நாட்டுக்கு அரசராக இருக்கிறாரென்று எனக்கு அப்பொழுது தெரியாமற் போயிற்று" என்று சந்தோஷமாய்க் கூறினான்.

11. அரசன் எதிரிலிருந்த மந்திரியை நோக்கி "திருவேங்கடத்தின்மேல் பழிவைத்து நீர் எடுத்துக்கொண்ட இரத்தினத்தைக் கொண்டுவாரும்" என்றான். மந்திரி மறுக்க வகையில்லாமல் குற்றத்தை ஒப்புக்கொண்டு இரத்தினத்தைக் கொடுத்துவிட்டதுமன்றித் தன்னை மன்னிக்கவேண்டுமென்றும் பன்முறை வணங்கி வேண்டிக்கொண்டான்.

12. அரசன், சபையிலுள்ளவர்களுக்கு உண்மையை உரைத்துத் திருவேங்கடத்தைக் கொண்டாடி அவன் படிப்புக்குத் தகுதியான ஒரு உத்தியோகம் கொடுத்து அவனை எப்பொழுதும் அருகி லிருத்திக்கொண்டான்; மந்திரியை வேலையிலிருந்து நீக்கிவிட்டான். உண்மை பேசுதலின் உயர்வைப் பார்த்தீர்களா?

## 30. நாடகம்—I

தாமோதரன்:—இனி அரை நிமிஷமும் இருக்கமுடியாது; வெருட்டி வெருட்டி வேலை வாங்குகிறான்; படியாள் என்று நினைத்துக்கொண்டுவிட்டான் போலும்; சரியான பாகஸ்தன் அல்ல? [உலாவுகிறான்.] படிக்கவேண்டுமாம்; என்ன படிப்பு? சோற்றுக்கில்லாத தரித்திரங்கள்தான் படிப்பு படிப்பு என்று படிப்பைக் கட்டிக்கொண்டு அழவேண்டும். எனக்கென்ன? கரைத்துக் குடித்தாலும் இரண்டு தலைமுறைக்குக் காணும்; நல்ல உடுப்புகளுக்குக் கதியுண்டா? கேட்டால், டாம்பீகம் கூடாதாம்; இந்த வேதாந்தம் யாருக்கு வேண்டும்? [நின்று ஆகாயத்தைப் பார்க்கிறான்.] நான் அப்படியிருக்கமாட்டேன்; ஷோக்காய் உடுத்திக்கொண்டு விதம்விதமான வண்டிகளில் ஊர்கோலம் போவதை விட்டு அடக்கமாம், அடக்கம்; என்ன அடக்கம்? [உலாவுகிறான்.] இவனென்ன எனக்குப் புத்தி சொல்வது? எனக்கு நான் யஜமானன்; 'பாகத்தைக் கொடு' என்றால், கொடுக்கவேண்டியதுதானே? 'யோசித்துச் சொல்; யோசித்துச் சொல்' என்கிறான்; வரட்டும்; ஓ! அதோ வந்துவிட்டான்; நம் பாடு அதிர்ஷ்டம்தான். [கோபாலன் வருகிறான்.] அண்ணா! வந்தனம் பண்ணுகிறேன். [வணங்குகிறான்.]

கோபாலன்:—சிரஞ்சீவியா யிருக்கவேண்டும்; தாமோதரம்! என் வரச்சொன்னாய்?

தாமோதரன்:—அண்ணா! என்னைக் கோபிக்கவேண்டாம்; என் பாகத்தை எனக்குக் கொடுத்துவிடுங்கள்; நான் தனித்திருக்கவேண்டுமென்று ஆசைப்படுகிறேன்.

கோபாலன்:—தம்பி! நீ இன்னும் அறியாதவன்; கலியாணமும் நடக்கவில்லை. தகப்பனாரே நமக்குப் பாகம் செய்துவிட்டுப் போயிருக்கிறார்; மோசம் பண்ணுவேன் என்று நினைக்காதே.

தாமோதரன்:—(பாடுகிறான்.)

அன்பு மிகுந்தவென் அண்ணாவே, வந்தனம் அடியில் செய்வேன். பாகம்
அப்படிச் செய்யாமலே அன்பாய்க் கொடுத்திடுவீர் அண்ணா நீரே. (அருமையண்ணா!)
வேறாய்ப் பிரிந்திருக்க வேண்டி நினைந்துவந்தேன். அண்ணா நானே. என்மேல்
மாறுபாடு கொண்டு மல்லுக் கிழுக்கவேண்டாம் அண்ணா நீரே.
ஷோக்கா யுடுத்திக்கொண்டு சொகுசாய்த் திரியவேண் அண்ணா நானே. மிகச் [டும்
சீக்கிரம் பாகத்தைச் சொல்லாமல் கொடுத்திடும் அண்ணா நீரே.
பட்டணங்களில் சென்று பாங்கா யுலவவேண்டும் அண்ணா நானே. பாகம்
சட்டெனக் கொடுத்திடும் தாமதம் செய்யவேண்டாம் அண்ணா நீரே.

கோபாலன்:—தாமோதரம்! சரி!! உன் எண்ணப்படியே உன் பாகத்தை எடுத்துக்கொள்; இதுதான் தகப்பனார்எழுதி வைத்த பத்திரம்; சரியாயிருக்கின்றதா? பார். [கொடுக்கிறான்; தாமோதரன் அதை வாங்கிப் பார்க்கிறான்.]

தாமோதரன்:—சரிதான். போய்வருகிறேன். வந்தனம்.

கோபாலன்:—புத்தியாயிரு. [தாமோதரன் செல்கிறான்.] இவனுக்கு யாரோ துர்ப்புத்தி போதித்திருக்கிறார்கள். ஏது! கொஞ்சநாளைக்குள் பொருளை முழுவதும் தொலைத்து விடுவான்; அப்புறம்தான் புத்திவரும்; நாம் என்ன செய்யலாம்; சொல்லிப் பார்த்தோம், இனி எப்படியாவது போகிறான். [போகிறான்.]

## 31. நாணயமுள்ள வியாப்பாரி

1. ஜெர்மனியைச் சேர்ந்த பிராங்கு போர்ட் என்ற பட்டணத்தில் மோஸஸ் ராத்சைல்டு என்று ஒரு வர்த்தகன் இருந்தான். அவன் மிகுந்த நாணயமுள்ளவன். ஒரு சமயம்

பிரான்சு தேசத்தில் ராஜகலகம் உண்டாயிற்று. அப்போது ஹெஸ்ஸிகாஸெல் நாட்டுச் சிற்றரசன் தன் பட்டணத்தை விட்டு ஓடத் தொடங்கினன். அவன் பிராங்கு போர்ட்டின் வழியாய்ப் போகும்போது, தன்னிடத்திலிருந்த விலையுயர்ந்த ஆபரணங்களையும், திரவியங்களையும், அந்த யூதசாவகாரியினிடத்தில் அடைக்கலம் வைத்துச் சென்றான்.

2. ராஜ்யம் அலங்கோலமா யிருந்ததனால், அந்தச் சாவகாரி முதலில் அவ்வளவு பெரியதொகையை ஏற்றுக்கொள்ள முடியாதென்று மறுத்துவிட்டான். ஆனாலும், அரசனுக்கு வேறு வழி இல்லாததனால், சீட்டு எழுதிக்கொடுக்காமல் விதியின்றி ஒப்புக்கொண்டு, அந்தப் பொருள்களைத் தன் தோட்டத்தின் ஒரு மூலையில் புதைத்து வைத்திருந்தான்.

3. பின்பு, சில மாதங்களில் இராஜகலகக்காரர்கள் மோஸஸ் ராத்சைல்டு வீட்டில் கொள்ளையடிக்கப் புகுந்தார்கள். ராத்சைல்டு அறுபதினாயிரம் பவுன் பெறுமான தன் சொத்துக்கள் அவ்வளவையும் அவர்களுக்குக் காட்டி 'இதுவரையில் நான் சம்பாதித்தது இவ்வளவுதான்' என்று சொன்னான். கலகக்காரர்கள் அவன்மீது சந்தேகம் கொள்ளவில்லை. அப்படியே எல்லாவற்றையும் எடுத்துக்கொண்டு போய்விட்டார்கள்.

4. அந்த வர்த்தகன் அவர்கள் நீங்கியதும் அரசன் திரவியத்தில் கொஞ்சம் எடுத்து வர்த்தகம் செய்ய ஆரம்பித்தான். ஏழு எட்டு வருஷங்களுக்குள்ளாகவே, தான் இழந்துபோன பொருள்களைவிட இருமடங்கு பொருளைச் சம்பாதித்துப் பொருளும் புகழும் அடைந்தான்.

5. அதற்குப் பின்பு கலகங்கள் அடங்கி இராஜ்யத்தில் அமைதி உண்டாயிற்று. ஹெஸ்ஸிகாஸெல் அரசன் மறுபடியும் சிங்காசனம் ஏறினன். ஆனால், யூதவர்த்தகனை மாத்திரம் தான் வைத்துப்போன பொருளைக் கொடுக்கும்படி கேட்க அவனுக்குத் தைரியம் உண்டாகவில்லை.

6. ஏனென்றால், "அவன் வீட்டில் கலகக்காரர்கள் புகுந்து கொள்ளை யடித்தது அவனுக்கு நன்றாய்த் தெரியும். மேலும் வர்த்தகன் தனக்குப் பற்றுச்சீட்டும் எழுதிக்

கொடுக்கவில்லை. களவுபோயிருந்தாலும் இருக்கலாம். அல்லது மறைத்து வைத்து மோசம் செய்தாலும் செய்திருக்கலாம்'' என்று சந்தேகப்பட்டான்.

7. ஆனால் அந்த நாணயமுள்ள வர்த்தகன் தானே ஒருநாள் ராஜசபைக்குச் சென்று அரசனைக்கண்டு "ஐயா! தங்கள் பொருள்கள் பத்திரமாயிருக்கின்றன. கொள்ளைக்காரர்களுக்கு என் பொருள் அவ்வளவையும் காண்பித்துக் கொடுத்துவிட்டேன். தங்கள் பொருளைக் காட்டவில்லை.''

8. "பின்பு, தங்கள் சொத்தில் கொஞ்சம் எடுத்து முதலாக வைத்து வர்த்தகம் செய்து வந்தேன். இப்போது நான் இழந்துவிட்ட பொருளுக்கு இரண்டு மடங்கு அதிகம் சம்பாதித்துவிட்டேன். ஆதலால் தங்கள் பொருளுக்கு நூற்றுக்கு ஐந்து வீதம் வட்டி சேர்த்துக் கொடுக்கவும் சித்தமாயிருக்கிறேன். கட்டளையில்லாமல் தங்கள் பொருளை எடுத்ததற்கு மன்னிக்கவேண்டும்'' என்று கூறினான்.

9. அரசன் அதற்குச் சந்தோஷித்துத் தன் பொருள் முழுவதையும் அவனிடமே ஒப்புவித்து மிகவும் குறைந்த வட்டியை வாங்கிக்கொண்டு வந்தான். நாளடைவில் அந்த யூதசாவகாரியின் நாணயம் ஐரோப்பா முழுவதும் பாவிவிட்டது. அநேகம் அரசர்கள் அவனிடத்திலேயே கொடுக்கல் வாங்கல் செய்துவந்தார்கள்.

10. பின்பு, ராத்சைல்டு தான் செய்துவந்த வியாபாரத்தை இன்னும் விரிவாகச் செய்யும்படி தன் மூன்று குமாரர்களையும் லண்டன், பாரிஸ், வியன்னா என்ற மூன்று பட்டணங்களிலும் இருக்கச் செய்தான். நாணயமான நடத்தையால் வரும் பலனைப் பார்த்தீர்களா?

## 32. நாடகம்—II

[தாமோதரன் பிரவேசிக்கிறான்]

தாமோதரன்:—(பாடுகிறான்.)

ஆயிரக் கணக்காய்ப் பணத்தைநான் இறைத்தே
அருமை நண்பரைக் கொண்டேன். பல
போகிகள் தூக்கிடும் பல்லக்கில் ஏறிநான்
புதுமை பல கண்டேன்.

வேளைக் கொருவிதமாய் வேண்டும் பலகாரம்
விரும்பி விரும்பி யுண்டேன். இனி
நாளைக் கென்னுமலிந் நாட்டிலுள்ள சுகம்
நன்றாய்க் கண்டு கொண்டேன்.

[உலாவுகிறான்.] அழகான ட்ரஸ்; அருமையான பூட்ஸ்; பளபளப்பான பிரம்பு; ஆ! ஆ!! என்ன சுகம்! என்ன சுகம்!! எத்தனை குதிரை! எத்தனை வண்டி!! ஷோக்காய்ப் பட்டணத்திலிருந்து இப்படி அனுபவிப்பதை விட்டு—காலையிலும் மாலையிலும் எத்தனை நண்பர்கள்? காணவருகின்றவர்களுக்குக் கணக்கேது? அப்படித் திரும்பினால் ஆயிரம் பேர், இப்படித் திரும்பினால் ஆயிரம்பேர்! யஜமானே! யஜமானே யென்று எத்தனை குமாஸ்தாக்கள் கைகட்டி நிற்கிறார்கள்; அண்ணனுக்கு ஏதாவது கொஞ்சம் உண்டா? என்ன சுகத்தைக் கண்டான்? பணம்காத்த பூதத்தைப்போல வீட்டைக் காத்துக்கொண்டு கிடக்கிறான்; யாரடா அங்கே? [மணியை அடிக்கிறான் ஒரு குமாஸ்தா ஓடிவருகிறான்.]



குமாஸ்தா:—பிரபு! வந்தனம். [வணங்குகிறான்.]

தாமோதரன்:—டிக்கட்டுகளை எல்லாருக்கும் கொடுத்துவிட்டாயா?

குமாஸ்தா:—ஆமாம் பிரபு! இப்போதுதான் கொடுத்து விட்டு வந்தேன்.

தாமோதரன்:—எத்தனை பெயர்கள் வருவார்கள்?

குமாஸ்தா:—நாற்பது பெயர்களுக்குக் குறையாமல் வருவார்கள்.

தாமோதரன்:—நல்லது, நம்மைப்பற்றி வெளியில் என்ன சொல்லிக்கொள்கிறார்கள்?

குமாஸ்தா:—பிரபு! குபேரன் என்றும் கர்ணன் என்றும் புகழ்கிறார்கள். இப்படி யாரால் செய்ய முடியும்? எத்தனையோ ஜமீன்தார்கள்கூடத் தங்கள் புகழைக் கேட்டுப் பிரமித்துப்போனார்களாம்.

தாமோதரன்:—அப்படியா? சந்தோஷம். இனி இன்னம் அதிகமாய்ச் செய்யவேண்டும்.

குமாஸ்தா:—பிரபு! ஒரு விண்ணப்பம்.

தாமோதரன்:—என்ன? என்ன?

குமாஸ்தா:—ஒன்றுமில்லை; அடியேன் பெண்ணுக்கு இந்த வருஷம் கலியாணம் பண்ணவேண்டும்; செலவுக்குப் பணம் கிடையாது; விழித்துக்கொண்டிருக்கிறேன்.

தாமோதரன்:—ஏன் முன்னே சொல்லக்கூடாது? எவ்வளவு பிடிக்கும்.

குமாஸ்தா:—கொஞ்சமாய்ப் பார்த்தாலும் அறுநூறு ரூபாய் பிடிக்கும்.

தாமோதரன்:—சரி இப்பொழுது சாவகாசமில்லை. இந்தா! இந்த முந்நூறு ரூபாயை வைத்துக்கொண்டு காரியத்தைப் பார்!

[கொடுக்கிறான்; குமாஸ்தா பெற்றுக்கொள்கிறான்.]

குமாஸ்தா:—பிரபுக்கள் ஏற்றிவைத்த விளக்கு. என்னவோ ஏழை; மறந்துபோகக்கூடாது.

தாமோதரன்:—நல்லது; விருந்து சித்தமாகட்டும். நான் வெளியில் கொஞ்சம் உலாவிவருகிறேன். [போகிறான்.]

குமாஸ்தா:—இந்த மூடத்தை இப்படித்தான் ஏமாற்ற வேண்டும். இதன் கையில் உள்ள பணம் எல்லாம் தொலைந்துவிட்டது. இனி வண்டி முதலானவைகளை விற்கவேண்டியதுதான்; இதுதான் சமயம். காற்றுள்ளபொழுதே தூற்றிக்கொள்ள வேண்டும். விருந்தைக் கவனிக்கலாம். [போகிறான்.]

## 33. கடித நாணயங்கள்

1. பிள்ளைகளே, நாணயங்களைப்பற்றி நீங்கள் படித்திருக்கிறீர்கள். செம்பு, நிக்கல், வெள்ளி முதலிய உலோக நாணயங்களை யல்லாமல், கடித நாணயங்களும் உண்டென்பது உங்களுக்குத் தெரியும். கடித நாணயங்களை நீங்கள் பார்த்திருக்கலாம். அவைகளை 'நோட்டுகள்' என்று சொல்வார்கள். 'நோட்டு' என்பது இராஜாங்கத்தாரால் கொடுக்கப்படும் ஒரு உறுதிமொழிச் சீட்டேயொழிய வேறல்ல.

2. ஒவ்வொரு கடித நாணயத்தின் நடுவிலும், அதன் மதிப்புத்தொகை இவ்வளவென்பது இங்கிலீஷ் எழுத்தில் அச்சிடப்பட்டிருக்கும். அதற்குமேல்'இந்திய இராஜாங்கம். இதை வைத்திருப்பவர் கேட்டபோது (கடித நாணயப்) பிரசுரசாலை எதிலாயினும், இந்தத்தொகை ரூபாய்களைத் தருவதாக நான் உறுதிமொழி அளிக்கிறேன்' என்று இங்கிலீஷ் பாஷையில் அச்சிடப்பட்டிருக்கும்.

3. கீழே, 'இந்திய இராஜாங்கத்துக்காக இன்னார்' என்று ஒரு பெரிய இராஜாங்க அதிகாரியின் கையெழுத்துடன் அச்சிடப்பட்டிருக்கும். கடித நாணயத்தின் வலது பாகத்திலும் இடது பாகத்திலும் ஒரே விதமாக, அதன் மதிப்புத்தொகை, இந்தியாவில் வழங்கும் முக்கியமான பாஷைகளில் இலக்கத்தாலும் எழுத்தாலும் காட்டப்பட்டிருக்கும். அதையல்லாமல், அந்தக் கடித நாணயம் பிறந்த வருஷம், மாதம், தேதி இவையும், அதன் இலக்கமும் குறிக்கப்பட்டிருக்கும். ஆனால் இப்பொழுது புதிதாய் பிரசுரமாய் இருக்கும் பத்து ரூபாய் கடித நாணயத்தில் மேல்கண்ட விவரங்களில் சிலது மாத்திரம் அச்சிடப்பட்டிருக்கின்றன.

4. இந்திய இராஜாங்கத்தின் கடித நாணயங்கள் பிரசுரமாகும் சாலைகள் பிரதான பட்டணங்களில் இருக்கின்றன.

இவ்விடங்களில் பிரசுரமாகும் கடித நாணயங்கள் ஏழுவகை யான மதிப்புள்ளவை: அவையாவன. (1) ஐந்து ரூபாய் (2) பத்து ரூபாய் (3) ஐம்பது ரூபாய் (4) நூறு ரூபாய் (5) ஐந்நூறு ரூபாய் (6) ஆயிரம் ரூபாய் (7) பதினாயிரம் ரூபாய் என்னும் மதிப்புடையன.

5. எல்லா நோட்டுகளுக்கும் வெவ்வேறான இலக்கம் உண்டு. அந்த இலக்கங்களைக் கணக்குப் புத்தகங்களில் பதிவுசெய்துகொண்டுதான் இராஜாங்கத்தார் நோட்டுகளைப் பிரசுரம் செய்வார்கள். கிழிந்துபோன, அல்லது மிகவும் அழுக்காய்ப்போன நோட்டுகள் தங்கள் கைக்குத் திரும்பி வந்தால் இராஜாங்கத்தார், அவற்றின் மதிப்புத்தொகையை நோட்டாகவோ, நாணயமாகவோ உரியவர்களுக்குக் கொடுத்துவிட்டு, சிதைந்துபோன நோட்டுகளின் இலக்கத்தைக் குறித்துக்கொண்டு அவைகளைக் கொளுத்திவிடுவார்கள்.

6. சில துன்மார்க்கர்கள், பொய் நோட்டுகள் செய்து ஜனங்களை ஏமாற்றிவிடுவதுண்டு. அப்படிப்பட்டவர்களை, இராஜாங்கத்தார் வெகு சுலபமாய்க் கண்டுபிடித்து அவர்களுக்குக் கடூரமான தண்டனை விதிப்பார்கள். ஆயினும், நாம் நோட்டுகளை வாங்கும்போது, நன்றாகப் பார்த்து வாங்க வேண்டும். உண்மையான நோட்டுக்கும் பொய் நோட்டுக்கும் உள்ள வித்தியாசம் கொஞ்சம் கவனித்துப் பார்த்தால் விளங்கிவிடும்.

7. நாகரிக இராஜ்யங்கள் பலவற்றினும் நோட்டுகள் அல்லது கடித நாணயங்கள் வழங்கி வருகின்றன. கொடுக்கல் வாங்கல்களுக்கு இவை மிகவும் சௌகரியமானவை என்பது யாவருக்கும் விளங்கும். இவைகளைக் கையாளும்போது நாம் சிறிது ஜாக்கிரதையாயிருந்தால், இவைகள் சீக்கிரத்தில் அழுக்கடைந்தும் கிழிந்தும் போகாமலிருக்கும்.

## 34. தபாற் கடிதம்

1. ஒருவருக்கு ஒருவர் வெகு தூரத்தில் உள்ள இரண்டு சிநேகிதர்கள் இருப்பதாக வைத்துக்கொள்வோம். அவர்கள் தங்கள் கருத்தை ஒருவர்க்கு ஒருவர் தெரிவித்துக்கொள்ள

வேண்டுமானுல் என்ன செய்வார்கள்? தாங்கள் தெரிவிக்க விரும்பியதைக் கடிதத்தில் எழுதித் தபாலில் போடுவார்கள். அதற்குத்தான் தபாற் கடிதம் என்று பெயர். தபாற்காரர்கள் கட்டுக் கட்டாகக் கடிதங்களே எடுத்துக்கொண்டு போவதை நீங்கள் பார்த்திருப்பீர்கள்.

2. அந்தக் கடிதங்களே அவர்கள் என்ன செய்கிருர்கள்? அவற்றின்மேல் எழுதியுள்ள விலாசத்தைப் பார்த்து எந்த எந்தக் கடிதம் யார்யாருக்குச் சேரவேண்டுமோ அந்த அந்தக் கடிதத்தை அவரவர்க்குக் கொடுத்துவிடுகிருர்கள். மேல் விலாசம் இல்லாவிட்டால் அப்படிக் கொடுக்கமுடியுமா? முடியாது. மேல்விலாசம் இருந்தும் அது சரியானதாய் இராவிட்டால் கடிதம் சேரவேண்டியவர்களுக்குச் சேர்வது கஷ்டம். ஆகையால் மேல்விலாசத்தைச் சரியாக எழுதவேண்டும். அதாவது வீட்டு இலக்கம், தெருப் பெயர், ஊர்ப் பெயர் முதலிய விவரங்கள் யாவும் தவருமல் எழுதவேண்டும்.

3. மேல்விலாசம் சரியாய் எழுதப்பட்ட கடிதங்கள் கூடச் சில சமயங்களில் உரியவருக்குப் போய்ச் சேர்வதில்லே. ஏன் என்பீர்களோ? விலாசதாரர் தாம் இருந்த இடத்தை விட்டு வேறிடத்துக்குப் போயிருக்கலாம். அல்லது அவர் அந்தக் கடிதத்தை வாங்க மறுத்துவிடலாம். அப்படிப்பட்ட கடிதங்களேத் தபால் உத்தியோகஸ்தர்கள் என்ன செய்வார்கள்? அனுப்பியவருடைய விலாசம் தெரிந்தால் அவருக்கு அதைத் திருப்பி அனுப்பிவிட வேண்டும் என்று சட்டம் இருக்கிறது. அப்படியே அனுப்பிவிடுவார்கள்.

4. அனுப்பியவருடைய விலாசம் தெரியாவிட்டால் என்ன செய்வார்கள்? கடிதத்தைப் பிரித்துப் படித்துப் பார்த்து அதிலிருந்து அனுப்பியவருடைய ஊர், பெயர், இருப்பிடம் முதலியவகளே அறிய முயல்வார்கள். அறிய முடிந்தால் அதைக்கொண்டு கடிதத்தை அவருக்கு அனுப்பிவிடுவார்கள். அறிய முடியாவிட்டால், சிலநாள் வரையில் வைத்திருந்து பிறகு அதைக் கிழித்தெறிந்து விடுவார்கள். கடிதம் அனுப்பியவருக்குத் தம் கடிதம் விலாசதாரருக்குப் போய்ச் சேர்ந்ததா இல்லேயா என்று தெரியாது.



5. ஆகையால், தபாற்கடிதம் எழுதுகிற ஒவ்வொருவரும் கடிதத்தின் மேலே அது யாருக்குப் போய்ச்சேரவேண்டு மோ அவருடைய விலாசத்தையும் தம்முடைய விலாசத்தை யும் எழுதவேண்டும். கடிதம் பெறவேண்டியவர் விலாசம் வலது பக்கத்திலும் கடிதம் அனுப்புகிறவர் விலாசம் இடது பக்கத்திலும் எழுதப்படவேண்டும். அனுப்புகிறவர் விலா சத்துக்குமேல் 'அனுப்பு' என்று குறிப்பது நலம்.

6. இப்படி யெல்லாம் எழுதியும்கூட எழுதிய கடிதம் பெறவேண்டியவர்க்கும் சேராமல் அனுப்பியவர் கைக்கும் திரும்பி வராமல் கிழித்தெறியப்படுவதுண்டு. எழுதிய எழுத் துக்கள் எவருக்கும் விளங்காமல் இருந்தால்தான் அப்படி நேரும். எழுதியிருப்பதை வாசிக்க முடியாவிட்டால் என்ன செய்கிறது? அப்படி எழுதுவது எழுதாமலிருப்பதற்குச் சமானந்தான். ஆகையால் எதையும் தெளிவாக எழுதவேண்

டும். முக்கியமாகத் தபாற் கடிதங்களின் மேல்விலாசங்களை மிகவும் தெளிவாக எழுதவேண்டும்.

7. இதுவரையில் சொன்ன விஷயங்கள் எல்லாம் இரண்டு விதிகளில் அடங்கும்.

முதலாவது:—தபாற் கடித விலாசங்களைத் தெளிவாகவும் சரியாகவும் விவரமாகவும் எழுதவேண்டும்.

இரண்டாவது:—தபாற் கடிதத்தில் பெறுகிறவர் விலாசத்தை வலது பக்கத்திலும் அனுப்புகிறவர் விலாசத்தை இடது பக்கத்திலும் எழுதவேண்டும்.

ஒரே பெயருடைய இரண்டு ஊர்கள் இருந்தால் எந்த ஊரைக் குறிக்கிறோமென்பதை அது உள்ள ஜில்லாவைக் காட்டியாகிலும், வேறு எவ்வகையாலாகிலும் உணர்த்தவேண்டியது அவசியம். சிறு கிராமங்களாயிருந்தால் அவை எந்தத் தாலுக்காவைச் சேர்ந்ததென்று குறிப்பிடுக.

8. விலாசம் எழுதுவதில் தமிழ் முறை இங்கிலீஷ் முறை என இரண்டு உண்டு. தமிழ் முறையில் முதலில் ஊர், பின் தெரு, பின் வீட்டிலக்கம், அதன்பின் கடிதத்துக் குரியவர் பெயர் ஆகிய இவ்வரிசையில் எழுதப்படும். இங்கிலீஷ் முறையில் முதலில் கடிதத்துக்கு உரியவர் பெயர், பின் வீட்டிலக்கம், பின் தெரு, பின் ஊர் ஆகிய இவ்வரிசையில் எழுதப்படும். எந்த முறையாக வேண்டுமானாலும் எழுதலாம். ஆனால் இரண்டு முறைகளையும் கலந்து எழுதக்கூடாது.

உதாரண தபாற் கடித விலாசங்கள்:

தமிழ் முறை.

தபால்
ஸ்டாம்பு

தஞ்சாவூர் ஜில்லா, திருத்துறைப்பூண்டி
தாலூக்கா, வேளூர்,
மேலைத் தெரு, 4 நெ. வீடு,
ம-ள-ள-ஸ்ரீ, மு சுப்பிரமணிய முதலியார்
அவர்களுக்கு.

அனுப்பு:
தென்னாற்காடு ஜில்லா
திண்டிவனம், சந்நிதித்
தெரு. 6 நெ. வீடு,
க. முருகைய செட்டியார்.

இங்கிலீஷ் முறை.

தபால்
ஸ்டாம்பு

ம-ா-ா-ஸ்ரீ,

மு. சுப்பிரமணிய முதலியார் அவர்களுக்கு,

4, மேலைத் தெரு, வேளூர்,

திருத்துறைப்பூண்டி (தாலூக்கா),

தஞ்சாவூர் (ஜில்லா).

அனுப்பு :

க. முருகையசெட்டியார்,
6, சந்நிதித் தெரு,
திண்டிவனம்,
தென்னாற்காடு (ஜில்லா).

## 35. வீதி ஒழுங்கு

1. பிள்ளைகளே, நீங்கள் வீட்டிலிருந்து பள்ளிக்கூடத்துக்கு வரும்பொழுதும், பள்ளிக்கூடத்திலிருந்து வீட்டுக்குப் போகும்பொழுதும் வீதிவழியாய் நடக்கிறீர்கள். வீதியில் அடிக்கடி வண்டிகள் போவதும் வருவதுமாய் இருக்கின்றன. ஜனங்களும் அடிக்கடி வீதிவழியாய்ப்போவதும்வருவதுமாயிருக்கிறார்கள். பெரிய பட்டணங்களில் உள்ள வீதிகளில் வண்டிகளின் போக்குவரத்தும் ஜன நடமாட்டமும் மிகவும் அதிகமாயிருக்கும், அப்படிப்பட்ட நகர வீதிகளின் வழியாய்ச் செல்லும்போது மிகவும் ஜாக்கிரதையாகச் செல்லவேண்டும். இல்லாவிட்டால் ஆபத்து உண்டாகும்.

2. சில பிள்ளைகள் பராக்குப் பார்த்துக்கொண்டும் சினேகிதர்களோடு பேசிக்கொண்டும் மிகவும் அசட்டையாக வீதி வழியே செல்கிறார்கள். அப்படிச் செல்வது பிசகு. திடீரென்று ஒரு மோட்டார்வண்டி பின்னால் வந்தால் அவர்கள் கதி என்ன ஆகும்? அவர்கள் திரும்பிப் பார்ப்பதற்குள்ளே மோட்டார் வண்டி அவர்கள்மீது ஏறிவிடுமல்லவா? அவ்விதமான ஆபத்துகளுக்கு உள்ளாகாமல் நீங்கள் ஜாக்கிரதையாகவும் ஒழுங்காகவும் வீதியில் நடக்கவேண்டும்.

3. ஜாக்கிரதையாக நடப்பது கூடும். ஒழுங்காக நடப்பதென்றால் என்ன என்று நீங்கள் கேட்கலாம். வீதியில் அந்த ஓரமாய் நடந்தால் என்ன, இந்த ஓரமாய் நடந்தால் என்ன, நடுவே நடந்தால் என்ன என்று எண்ணி நினைத்த பக்கமாக நடக்கக்கூடாது. இன்ன பக்கமாக நடக்கவேண்டும் என்று தெரிந்துகொண்டு அந்தப் பக்கமாகவே நடக்கவேண்டும். அதுதான் ஒழுங்காக நடப்பது.

4. வண்டிகள் இடது பக்கமாகத்தான் போகவேண்டும் என்று சட்டம் ஏற்பட்டிருக்கிறது. பின்னேபோகும் ஒரு வண்டி முன்னே போகும் ஒரு வண்டியைக் கடந்துசெல்ல வேண்டியிருக்கலாம். அப்பொழுதுமட்டும் பின்வண்டி முன் வண்டிக்கு வலதுபக்கமாகச் சென்று, அதைக் கடந்தபிறகு முன்போலவே இடது பக்கமாகச் செல்லவேண்டும். மற்றப்படி வண்டிகள் ஒருபொழுதும் வலது புறமாகச் செல்லக்

கூடாது. இது இராஜாங்கச் சட்டம். இதை மீறியவர்கள் தண்டிக்கப்படுவார்கள்.

5. வண்டிகள் இடது பக்கமாகவே செல்லுமாகையால் நீங்கள் இடது பக்கமாக நடக்கக்கூடாது. ஏனென்றால், உங்களுக்குப் பின்னால் வண்டிகள் வரக்கூடும். அப்படி வருவதை நீங்கள் பார்க்கமுடியாது. ஆகையால் நீங்கள் எப்பொழுதும் வீதியில் நடக்கும்போது உங்களுக்கு வலது பக்கமாகவே நடக்கவேண்டும். உங்களுக்கு வலதுபக்கம் உங்கள் எதிரே வருகிற வண்டிகளுக்கு இடது பக்கமாகுமல்லவா? ஆதலால் வருகிற வண்டிகள் உங்கள் கண்ணுக்குத் தெரியும்படி எதிரே வரும். நீங்கள் அவைகளைக் கண்டு ஒதுங்கிப் போகக்கூடும். போகிற வண்டிகள் உங்களைவிட்டு விலகி இடதுபக்கமாகப் போகும். அவைகளால் உங்களுக்கு ஆபத்து நேர இடமில்லை.

6. பாருங்கள், 'வீதியில் நடக்கும்பொழுது வலதுகைப் பக்கமாக நடக்கவேண்டும்' என்ற இந்த ஒரு ஒழுங்கை அனுசரித்து நடப்பது எவ்வளவு நல்லது. எத்தனை வண்டிகள் போனாலும் வந்தாலும் உங்களுக்கு ஆபத்து நேரிட இடமில்லை. ஆகையால் நீங்கள் ஒவ்வொருவரும் இந்த ஒழுங்கை மனத்தில் வைத்து இதன்படி நடக்கவேண்டும். பள்ளிக்கூடத்தைவிட்டு வீட்டுக்குப் போகும்பொழுது பெரிய பிள்ளைகள் முன்வந்து சிறு பிள்ளைகளை இந்த ஒழுங்கின்படி நடத்திக்கொண்டு போகவேண்டும்.

7. வீதியில் நடக்கும்பொழுது ஜாக்கிரதையாகவும் நடக்கவேண்டும். பின்னால் வண்டி வருகிற சத்தம் கேட்டால் வலது புறமாக எவ்வளவு தூரம் ஒதுங்கிச் செல்லக்கூடுமோ அவ்வளவு தூரம் ஒதுங்கிச் செல்லுங்கள். நடைமேடைகள் உள்ள வீதியாக இருந்தால் நடைமேடைமீது செல்லுங்கள். முச்சந்தி நாற்சந்தி முதலான இடங்களைக் கடக்கும்பொழுது நாற்புறமும் பார்த்து மோட்டார் முதலான வண்டிகள் வருவதை அறிந்து கருத்தாக இருங்கள். மோட்டார் வண்டிகள் வருவதை ஊதுகொம்பின் சத்தத்தால் அறியலாம். காதையும் கண்ணையும் விழிப்பாக வைத்துக்கொண்டு வீதியில்

வலது பக்கமாகச் செல்லுங்கள். எவ்வளவு நெருக்கமான போக்குவரத்துள்ள பெரிய நகரவீதியிற் சென்றாலும் உங்களுக்கு யாதொரு ஆபத்தும் நேராது.

## 36. நாடகம்—III

[தாமோதரன் தரித்திர வேஷத்தோடு பன்றி மேய்த்துக்கொண்டு
பிரவேசிக்கிறான்.]

தாமோதரன்:—(பாடுகிறான்.)

அண்ணன் வார்த்தை கேட்காமல் அனியாயமாய்ப்போ
ஆடியே நாட்டில் ஓடியே ரூபாய் [னேன்,



அறுபதினாயிரம் அரைக்கணம் தாரை வார்த்தேன்
ஆடியே நண்பர் தேடியே.
முன்பின் அறியாமல் மோசம் போனேனையோ!
மூடனே முழு மூடனே.
நண்பர்களென்று சொல்லி நயமாய்மோசம் செய்தார்கள்
நியாயமோ? என்ன மாயமோ?

பன்றிக்குட்டிகள் மேய்த்துப் பரதேசிபோ லானேன்
பாவியே, போகா தாவியே.

[உலாவுகிறான்.] ஆ! ஆ!! என்ன காலம் வந்தது? முகஸ்துதிக்காரர்களுக்கு நான் முழுவதும் தாரை வார்த்து விட்டேனே; என் தலையெழுத்து, பன்றி மேய்ப்பதாகவா முடிந்தது! ஐயோ! ஐயோ!! அண்ணனைப் போல அப்போதே படித்திருந்தால், இத்தனை அலங்கோலம் அடைந்திருக்க மாட்டேனல்லவா? பன்றிக்குக் கொடுக்கின்ற தவிட்டையும் திருடித் தின்னவேண்டி வந்தது; கந்தைத் துணியோடு குளிரில் இருந்து வருந்துகிறேன். கடவுளே! என் பிராணனைக் கொண்டுபோகக் கூடாதா? கொஞ்சமாவது படித்திருந்தால்—ஐயோ! நான் பங்கிட்டுக்கொண்டு இன்னம் சரியாய் இரண்டு வருஷம்கூட ஆகவில்லையே; எல்லாவற்றையும் தொலைத்துவிட்டேனே; [ஆகாயத்தைப் பார்க்கிறான்.] எனக்கு ஒருவரும் இப்போது துணை செய்யமாட்டேன் என்கிறார்கள்; அண்ணனிடம் போகவும் முகம் கிடையாது; நான் என்னதான் செய்து தொலைப்பேன்? கூடப்பிறந்த தோஷத்துக்காக வாவது கொஞ்சம் கருணை பாராட்டமாட்டாரா? புளித்த காடியைக் கரைத்து வார்ப்பதற்கு அந்தமுண்டை, யஜமானியாம் யஜமானி; என்ன பாடு படுகிறாள்! ஐயோ! என் அண்ணி எத்தனை அன்போடு உபசரித்து வந்தார்கள்; அவர்கள் காலில் விழுந்தாவது கேட்டுக்கொள்ளுகிறேன், இனி இந்தத் துஷ்ட யஜமானியின் முகத்தில் விழிக்கவே மாட்டேன்; இவளும் பன்றியும் எப்படியாவது போகட்டும்; [த டி யை வீசி யெறிந்துவிட்டுப் பாடுகிறான்.]

படியாக் குறையினாலே பணத்தைநான் போக்கினேன்;
அடிக்காத பிள்ளையாகி ஆடிநாசம் ஆக்கினேன்.
பன்றிமேய்த்தும் பாழ்வயிறு பட்டினியின் மூழ்குதே;
என்ன தொழில் செய்துவாழ்வேன் எங்கித்துயர் மூளுதே.

---

## 37. மகமாரி அல்லது பிளேக்

1. அநேக நாளைக்குமுந்தி மதுரை மாநகரில் திருமலை நாயகன் என்னும் பரோபகாரமுள்ள அரசன் ஒருவன் இருந்தான். அவன் மாறுவேடம் பூண்டு, ஜனங்களோடு கலந்திருந்து, அவர்களுடைய நிலைமையையுங் குறைகளையும் நன்குணர்வது வழக்கம். மாரிகாலத்தில் அப்படிப்பட்ட சமயத்தில், அவன் மதுரைக்கடுத்த கிராமங்களில், ஜனங்களிற் பெரும்பாலரும் தொடைமூலத்திலும் அக்குளிலும் கழுத்திலும் நோக்காடுள்ள வீக்கங்கண்டு காய்ச்சல்போற் கிளம்பும் ஒருவித நோயால் மாண்டார்களென்று கேள்வியுற்றான். அப்போது அவன், வீடுகளிலும் தானியமண்டிகளிலும் கடைகளிலும் எலிகள் அதிசயமாகச் செத்தன என்றும் தெரிந்துகொண்டான். சுற்றுப்பட்டுக் கிராமாந்தரங்களில் இருந்துவந்த துயரமான சமாசாரங்கள் அதிபயங்கரமாயிருந்தன. அவன் அதிக நல்லரசனாகையால் ஜனங்களுடைய க்ஷேமத்தையும் விருத்தியையும்பற்றிக் கவனிப்பது தன் பாரமெனக் கொண்டான்.

2. அதிதுரிதமாய் அவன் தன் ஆலோசனைச் சபையாரைக் கூட்டி அவசியமான உபாயங்களைப்பற்றி ஆலோசித்தான். எல்லோரும் இன்னது செய்வதென்று தெரியாமல் கலவரப்பட்டார்கள். கடைசியாக, கூட்டத்திலிருந்த ஞானிகளில் ஒருவர் எழுந்து, "ஐயனே, என்னிடத்தில் ஒருவர் வந்திருக்கிறார். அவர் அறிவிலுங் கல்வியிலுஞ் சிறந்தவர்; அடிக்கடி வடக்கேயும் வட கிழக்கேயும் நெடுந்தூரத்துள்ள திபேத்துக்கும் சீனாவுக்கும் பிரயாணஞ் செய்திருக்கிறார். அங்கே ஜனங்கள் இப்படிப்பட்ட வியாதியால் வருந்தியிருக்கிறார்கள். ஆகையால் நமக்கு அவர், இதுவிஷயத்தில் வேண்டிய அளவு தெளிவுண்டாக்குவார்" என்றார்.

3. இதுகேட்ட அரசற்குப் பரமானந்த மாயிற்று. உடனே அவன் அந்த விருந்தாளியை அரண்மனைக்கு அழைத்துக்கொண்டுவரக் கட்டளையிட்டான்.

4. பிரயாணி அரச கட்டளைக்குட்பட்டு வெகுசீக்கிரத்தில் அவர்களுக்கிடையில் வந்திருந்தார். அவரைக் கண்ட

அரசன் தான் கேள்வியுற்றிருந்ததைத் தெரிவித்து, அவருடைய யோசனையைக் கேட்டான். அந்த வியாதி மகமாரி தான் என்று பிரயாணி உடனே சொன்னார். ஆயினும், அவர் அதுவிஷயத்தைப்பற்றித் தமது முழு யோசனையையும் சொல்லுமுன் அந்தக் கிராமங்களைத் தாமே நேரிற் சென்று பார்வையிடவேண்டு மென்றும் விரும்பினார். இரண்டு இரவுகள் கடந்தன. பிறகு அவர் அரசனைக் கண்டு "ஐயனே, இந்தக் கொடுநோய் ஆதியில் நான் உத்தேசித்துச் சொன்னபடிமகமாரியன்றிமற்றொன்றன்று. இதுமுக்கியமாய் எலிகளுக்கு வரும்நோய். அது கண்ணுக்குத் தெரியாத சிறு புழுமுட்டைகளால் உண்டாகிறது. அவைகள் எலிப்பேனால் நமக்குத் தொத்திப் பரவுகின்றன. எலிகள் இல்லையேல், அதாவது வீடுகளில் எலிகள் மனிதனோடு நெருங்கி வாழ்வதில்லையேல், மகமாரி மனித வியாதியாமளவில் மறைந்து போகும். வீட்டுக்குள்ளேனும் அதைச் சுற்றியேனும் எலிகள் சாவக்கண்டால், அதற்குள் வாழ்வார்க்குப் பத்துப் பதினைந்து தினங்களில் மகமாரிநோய், காணுமென்பது நிச்சயம். பேன்கள் எலிகளின் இரத்தத்தை உறிஞ்சிப் பிழைக்கின்றன. எலிகளுக்கு மகமாரி வந்தால், அவைகளின் இரத்தத்தைக் குடிக்கும் பேன்கள், மகமாரிப் புழு முட்டைகளையும் உட்கொள்ளுகின்றன. எலிகளெல்லாம் இறந்தபிறகு, பேன்களுக்கு இரை வேண்டுமாகையால், அவைகள் அவ்வீட்டில் வாழும் மனிதரைப்பற்றிச் சுலபமாய் இரை தேடிக் கொள்கின்றன. உடைகளிலும் படுக்கைகளிலும் அவைகள் ஒட்டியிருந்து சமயோசிதமாய் மனிதனைக் கடிக்கின்றன. அவைகள் கடிக்கையில், மகமாரிப் புழுமுட்டைகள், அவைகளிலிருந்து மனிதனுடலிற் பாய்கின்றன. அதனால் அடிக்கடி அவன் மகமாரி நோய்க்கு ஆளாகின்றான். காய்ச்சல் காண்கிறது. அக்குளில் கழுத்தில் அல்லது தொடைமூலத்தில் நோக்காடுள்ள வீக்கம உண்டாகிறது. சிலர் காய்ச்சலும் இருமலுமாய்ச் சுவாசப்பையழற்சியால் (Pneumonia or Inflammation of the Lungs) மாள்கிறார்கள். சிலர் வெறுங்காய்ச்சல் முதிர்ந்து இரண்டொரு தினத்தில் இறக்கிறார்கள். குளிர்காலத்தில்தான் மகமாரி வழக்கமாய் வருகிறது. இது அக்டோபரிலிருந்து மார்ச்சுவரையிலும் உள்ள

காலம். அப்போது எலிகளும் பேன்களும் பெருகுவதற்கு அதிக அனுகூலம். நோய் பரவின கிராமவாசிகளைக் காக்க ஒரே வழிதான் உண்டு; அவர்களை அடியோடு ஒழித்துக் கொண்டு போய்ச் சுகாதாரக் கூடாரங்களிற் சேர்த்து அவர்களுக்கு மகமாரி அம்மை குத்திவிடவேண்டும். ஆகையால், இப்போது நான் செய்யச் சொல்லுகிறபடி நடக்க வேண்டுமென்று உமது மந்திரிக்கு நீர் கட்டளையிட்டால் இந்தப் பட்டணத்தில் மகமாரி பறவாது பறக்கும்'' என்று முடித்தார்.

5. மகாராஜாவுக்கு மகத்தான சந்தோஷம் பொங்கிற்று. இத்தனை உண்மைகளைத் தெரிவித்தவர்க்கு எத்தனை பெரிய வெகுமதி கொடுத்தாலும் ஈடாகாதே என்று எண்ணி அவர்க்கு ஐசுவரியங்களை வழங்குவதாக வாக்களித்தார். உடனே, பிரயாணி, மந்திரியை நோக்கி, “ஐயோ! உங்கள் ஊரில் பணக்கார வியாபாரிகள் இருநூறுபேரை வரவழைத்துக் கடலையளவுள்ள இருநூறு வயிரமணிகளைக் கொண்டு வரச் சொல்லுங்கள்'' என்றார். மந்திரியும் அப்படியே செய்தான். வியாபாரிகளும் சந்தோஷமாய் இருநூறு வயிரமணிகளைக் கொண்டுவந்து வைத்தார்கள்.

6. பிறகு, பிரயாணி கூட்டிற் பிடித்துப்போட்ட இருநூறு எலிகள் வேண்டும் என்றார். அவர் விரும்பியபடியே இருநூறு எலிகளும் கூட்டோடு வந்து சேர்ந்தன.

7. பின்பு, அவர் அவைகளில் ஒன்றைக் கூட்டிலிருந்தெடுத்து, அதன் அடிவயிற்றளர்ந்த தோலைப் பையக் கீறி, அதிக சாமர்த்தியமாய் அதில் ஒரு வயிரமணியை நுழைத்து, மறுபடியும் அதைக் கூட்டில்விட்டு அடைத்தார். இப்படியே அவர் ஒவ்வோர் எலியையும் செய்தார்; கொஞ்சந் தானியமும் தண்ணீரும் ஒவ்வொரு கூட்டிலும் வைத்தார். கூடுகளையெல்லாம் ஓரறையில் சேர்த்து அதன் கதவைப் பூட்டி முத்திரையிட்டுப் போர்வீரரைக் காவல் வைத்தார்.

8. ஈரிரவுகள் சென்றன. மூன்றுநாள் நள்ளிரவில் பிரயாணி, மந்திரியைக்கண்டு, பத்து நம்பிக்கையான அரண்மனை வேலையாட்களைக் கூட்டிக்கொண்டுவந்து, முத்திரையிட்ட அறைக் கதவைத் திறக்கச்சொன்னார். அப்படியே அறையைத் திறந்தார்கள். பிரயாணி உள்ளே நுழைந்து

விளக்கைக் கொளுத்தி ஒவ்வொரு எலியையும் சோதித்தார். சிறு கீறல்களெல்லாம் நன்ருய் ஆறி வயிரங்கள் தோலுக்குள் மறைந்திருந்தன. பிறகு அவர் கூடுகளை வீதிகளிற் கொண்டுபோகும்படி வேலையாட்களுக்குக் கட்டளையிட்டார். மந்திரியும் பிரயாணியும், அவர்களைப் பின்தொடர்ந்தார்கள். கொஞ்சதூரம் அவர்கள் போனபிறகு ஒரு வேலைக்காரனிடத்திலிருந்த கூடுகளில் ஒன்றைப் பிரயாணி வாங்கி, அதற்குள் இருந்த எலியை விட்டுவிட்டார். அது இருட்டில் ஓடிப்போய்விட்டது. பிறகு அவர்கள் நகரத்தின் ஒவ்வொரு பக்கத்துக்கும் போனுர்கள். போகும்போது பிரயாணி அங்கங்கும் நின்று ஒவ்வோர் எலியாய் விட்டுக்கொண்டே போனுர். கடைசியாய் எல்லா எலிகளும் விட்டாயின. மந்திரியும் ஆட்களும், பிரயாணி செய்கையைக் கண்டு ஒன்றுந் தோன்ருமல் மயங்கினுர்.

9. மறுநாட்காலையில் நகரமெங்கும் விளம்பரம் வெளிவந்தது. இருநூறு எலிகளை விட்டிருக்கின்ருேம். ஒவ்வொன்றின் அடிவயிற்றிலும் உயர்ந்த நீரோட்டமான கடலையளவுள்ள வயிரம் இருக்கிறது. எலியைப் பிடித்துக் கொன்று காட்டும் எவனும் வயிரத்தைக் கண்டெடுத்து வைத்துக் கொள்ளலாம்; அன்றி 'அவன் இஷ்டப்படி அதை விற்றுக் கொள்ளலாம்' என்பதே அது.

10. விளம்பரங்கேட்ட ஜனங்களில் அநேகர் இப்படியுஞ் செய்திருப்பார்களா என்று அதிசயப்பட்டு, அதை நம்பவேயில்லை. ஆனுலும், சில ஏழைகள் எலி வேட்டையாடி வயிரங்களைக் கண்டுபிடிக்கத் தொடங்கினுர்கள். கூலிக்கார ஏழை ஒருவன் தான் கொன்றதோர் எலிவயிற்றில் வயிரங் கண்டெடுத்தான். அதை அவன் பெரு விலைக்கு விற்றுப் பணக்காரனுனன். இந்தச் சங்கதி நகரமெங்கும் பரவின போது, மற்றவர்களுக்கும் மகத்தான உற்சாகம் பிறந்தது. எழுதுகிறவன் மேசையைவிட்டு எழுந்தான்; வர்த்தகன் கடையைவிட்டுக் கிளம்பினுன். ஆண்பெண் குட்டிக்குழந்தைகள் அனைவரும் வேலையையும் விளையாட்டையும் விட்டு வேகமாய்ப் புறப்பட்டார்கள். எல்லோரும் வேட்டையாடி எலிகளைக்கொன்று வயிரங்களைத் தேடினுர்கள். எலிகள் சாக்

கடை வெள்ளத்திற் குப்பை குப்பையாய் மிதந்தோடின. கூறைமேலும் அவைகளைத் தூரத்தி அடித்தார்கள். எலிப் பொறி செய்த தச்சர்க்குவியாபாரம் பெருத்து ஏராளமான பணங் குவிந்தது. பூனை ஒட்டைவிலைக்கு விற்றது. ஒருவாரத் துக்குள் நூறாயிரம் எலிகள் கொலையுண்டன. ஒவ்வொரு நாளும் எறக்குறைய அவ்வாறு வயிரங்களுக்குக் குறையா மல் அகப்பட்டுக்கொண்டே வந்தன. எண்ணி இரண்டு வாரத்துக்குள் நகரத்தில் ஒரெலியும் இல்லாமல் ஒழிந்தது. எலிகளை அழித்ததோடுகூட மகமாரி பரவியிருந்த கிராமங் களிலிருந்து வந்திருந்த தானியங்களையும் பண்டங்களையும் நாலுமணி காலத்திற்குக் குறையாமலும் ஆறு மணி காலத் திற்கு அதிகப்படாமலும் சூரிய கிரணத்திற் காயவைத்தார் கள். ஏனென்றால் தானியப் பைகளில்தான் எலிக்குஞ்சுக் கூட்டங்களும் பேன்களும் ஒட்டிக்கொண்டு வருவது வழக் கம். இதே காரணத்தால், நகரத்திற் குடிபுகஓடிவந்த மகமாரிக் கிராமத்தார்களைத் தடுத்து நகரத்தெல்லையில் நிறுத்தி அவர்க ளையும் அவர்கள் உடைமைகளையும் பரிசுத்தஞ்செய்தார்கள்.

11. தானிய மண்டிகளை எலி நுழையா இடங்களாக்கி னார்கள். மகமாரி வியாதிக்குட்பட்ட ஜனங்களுக்கு அதைத் தடுக்கும் மகமாரி அம்மை குத்தினார்கள்.

12. அதற்குள் நாட்டில் நெடுந்தூரம் மகமாரி நோய் மும்முரமாய்ப் பரவிற்று. ஆயிரக்கணக்கான மாந்தர் மரித் தார்கள். அநேகர் வீடுகளையும் நாடுகளையும் விட்டோடினார் கள்; குடும்பங்கள் குலைந்தன; வியாபாரம் வீழ்ந்தது. இப்படி எல்லா விதத்திலும் அந்த நோய் படுநாசம் பண்ணி ற்று. அதனால் துயரமும் துன்பமும் உண்டாயின.

13. சில மாதங்கள் சென்றன; வேனில் வந்தது. நக ரத்தில் அப்போது மகமாரி ஒழிந்திருந்தது. ஜனங்களெல் லாரும் சந்தோஷமாயிருந்தார்கள். நகரம் வளம்பெருகியிருந் தது. முற்றிலும் அரசன் அதிக சந்தோஷமாய்ப் பிரயாணி வார்த்தைகள் உண்மையெனக் கண்டான். ஆகையால் அவன் தனது பொக்கிஷத்திலிருந்து பெருந்தொகை கொண்டுவரக் கட்டளையிட்டு, அதைப் பிரயாணிக்குக் கொடுத்துப் போற்றினான். அவரும் அந்நகரத்திலேயே குடிபுகுந்து சந்தோஷமாய் வாழ்ந்தார்.

# செய்யுள் பாடங்கள்

## (1)

ஔவையார் அருளிச்செய்த

## நல்வழி

1 சாதி யிரண்டொழிய வேறில்லை; சாற்றுங்கால்,
நீதி வழுவா நெறிமுறையின்—மேதினியில்
இட்டார் பெரியோர், இடாதார் இழிகுலத்தோர்
பட்டாங்கி லுள்ள படி.

2 வருந்தி யழைத்தாலும் வாராத வாரா;
பொருந்துவன போமினென்றாற்போகா;–இருந்தேங்கி
நெஞ்சம் புண்ணாக நெடுந்தூரம் தாம்நினைந்து
துஞ்சுவதே மாந்தர் தொழில்.

3 எல்லாப் படியாலும் எண்ணினா லிவ்வுடம்பு
பொல்லாப் புழுமலிநோய்ப் புன்குரம்பை;—நல்லார்
அறிந்திருப்பா ராதலினால் ஆங்கமல நீர்போல்
பிறந்திருப்பார் பேசார் பிறர்க்கு.

4 ஆற்றுப் பெருக்கற் றடிசுடுமந் நாளுமவ்வா
றூற்றுப் பெருக்கால் உலகூட்டும்;—ஏற்றவர்க்கு
நல்ல குடிப்பிறந்தார் நல்கூர்ந்தார் ஆனாலும்
இல்லையென மாட்டார் இசைந்து.

5 ஆண்டாண்டு தோறும் அழுது புரண்டாலும்
மாண்டார் வருவரோ? மாநிலத்தீர்;—வேண்டா:
நமக்கும் அதுவழியே நாம்போ மளவும்
எமக்கென்னென் றிட்டுண் டிரும்.

6 ஒருநா ளுணவை ஒழியென்றால் ஒழியாய்;
இருநாளைக் கேலென்றால் ஏலாய்;—ஒருநாளும்
என்னோ வறியாய்: இடும்பைகூர் என் வயிறே,
உன்னோடு வாழ்த லரிது.

7 பிச்சைக்கு மூத்த குடிவாழ்க்கை பேசுங்கால்
இச்சைபல சொல்லி யிடித்துண்கை;—சிச்சீ
வயிறு வளர்க்கைக்கு மான மழியா
துயிர்விடுகை சால வுறும்.

8 பெற்றார் பிறந்தார் பெருநாட்டார் பேருலகில்
உற்றார் உகந்தார் எனவேண்டார்,—மற்றோர்
இரணம் கொடுத்தால் இடுவர்; இடாரே
சரணம் கொடுத்தாலும் தான்.

9 பாடுபட்டுத் தேடிப் பணத்தைப் புதைத்துவைத்துக்
கேடுகெட்ட மானிடரே கேளுங்கள்:—கூடுவிட்டிங்
காவிதான் போயினபின் பாரே யநுபவிப்பார்?
பாவிகா ளந்தப் பணம்.

10 ஆன முதலில் அதிகம் செலவானால்
மான மழிந்து மதிகெட்டுப்:—போனதிசை
எல்லார்க்கும் கள்ளனாய் ஏழ்பிறப்பும் தீயனாய்
நல்லார்க்கும் பொல்லனாம் நாடு.

11 ஒன்றை நினைக்கின் அதுவொழிந்திட் டொன்றாகும்;
அன்றி யதுவரினும் வந்தெய்தும்;—ஒன்றை
நினையாத முன்வந்து நிற்பினும் நிற்கும்:
எனையாளும் ஈசன் செயல்.

12 மரம்பழுத்தால் வெளவாலை வாவென்று கூவி
இரந்தழைப்பார் யாவரு மங்கில்லை;—சுரந்தமுதம்
கற்றா தரல்போல் கரவா தளிப்பரேல்
உற்றார் உலகத் தவர்.

13 கல்லானே யானாலும் கைப்பொருளொன் றுண்டாயின்
எல்லாரும் சென்றங் கெதிர்கொள்வர்;—இல்லானை
இல்லாளும் வேண்டாள்மற் றீன்றெடுத்த தாய்வேண்
செல்லா தவன்வாயிற் சொல். [டாள்

## (2)

### சிவப்பிரகாச சுவாமிகள் அருளிச்செய்த

## நன்னெறி

14 என்றும் முகமன் இயம்பா தவர்கண்ணும்
சென்று பொருள்கொடுப்பர் தீதற்றோர்—துன்று சுவை
பூவிற் பொலிகுழலாய்! பூங்கை புகழவோ
நாவிற் குதவும் நயந்து?

15 பிறர்க்குதவி செய்யார் பெருஞ்செல்வம் வேறு
பிறர்க்குதவி யாக்குபவர் பேறும்.—பிறர்க்குதவி
செய்யாக் கருங்கடனீர் சென்று புயல்முகந்து
பெய்யாக் கொடுக்கும் பிறர்க்கு.

16 நீக்க மறுமிருவர் நீங்கிப் புணர்ந்தாலும்
நோக்கின் அவர்பெருமை நொய்தாகும்;-பூக்குழலாய்!
நெல்லின் உமிசிறிது நீங்கிப் பழமைபோல்
புல்லினும் திண்மைநிலை போம்.

17 உள்ளம் கவர்ந்தெழுந் தோங்கு சினம்காத்துக்
கொள்ளும் குணமே குணமென்க:—வெள்ளம்
தடுத்த லரிதோ, தடங்கரைதான் பேர்த்து
விடுத்த லரிதோ விளம்பு?

18 தங்குறை தீர்வுள்ளார் தளர்ந்து பிறர்க்குறூஉம்
வெங்குறை தீர்க்கிற்பாற் விழுமியோர்.—திங்கள்
கறையிருளை நீக்கக் கருதா துலகில்
நிறையிருளை நீக்குமேல் நின்று.

19 வருந்து முயிரொன்பான் வாயி லுடம்பிற்
பொருந்துதல் தானே புதுமை;—திருந்திழாய்!
சீதநீர் பொள்ளற் சிறுகுடத்து நில்லாது
வீதலோ? நிற்றல் வியப்பு.

20 எந்தைநல் கூர்ந்தான் இரப்பார்க்கீந் தென்றவன்றன்
மைந்தர் தம்மீகை மறப்பரோ?—பைந்தொடீஇ!
நின்று பயனுதவி நில்லா வரம்பையின் கீழ்ச்
கன்று முதவுங் கனி.

21 இன்சொலா லன்றி இருநீர் வியனுலகம்
வன்சொலால் என்றும் மகிழாதே.—பொன்செய்
அதிர்வளையாய்! பொங்கா தழற்கதிராற் றண்ணென்
கதிர்வரவாற் பொங்கும் கடல்.

22 பெரியவர்தம் நோய்போற் பிறர்நோய் கண்டுள்ளம்
எரியி னிழுதாவர் என்க.—தெரியிழாய்!
மண்டு பிணியால் வருந்து பிறவுறுப்பைக்
கண்டு கலுழுமே கண்.

23 உண்டு குணமிங் கொருவர்க் கெனினும்கீழ்
கொண்டு புகல்வதவர் குற்றமே;—வண்டுமலர்ச்
சேக்கை விரும்பும் செழும்பொழில்வாய் வேம்பன்றோ
காக்கை விரும்புங் கனி?

24 முனிவினும் நல்குவர் மூதறிஞர்; உள்ளக்
கனிவினும் நல்கார் கயவர்:—நனிவிளைவிற்
காயினு மாகும் கதலிதான்; எட்டிபழுத்
தாயினு மாமோ? அறை.

25 நல்லார் செயுங்கேண்மை நாடோறு நன்றாகும்;
அல்லார் செயுங்கேண்மை யாகாதே;—நல்லாய்கேள்:
காய்முற்றின் தின்தீங் கனியாம், இளந்தளிர்நாள்
போய்முற்றின் என்னாகிப் போம்?

## (3)
## நீதிவெண்பா.

26 தாமரைபொன் முத்துச் *சவரங்கோ ரோசனைபால்
பூமருதேன் பட்டுப் புனுகுசவ்வா தாமழல்மற்
றெங்கே பிறந்தாலும் எள்ளாரே: நல்லோர்கள்
எங்கே பிறந்தாலும் என்?

27 அரிமந் திரம்புகுந்தால் ஆனை மருப்பும்
பெருகொளிசேர் முத்தும் பெறலாம்; நரிநுழையில்
வாலுஞ் சிறிய மயிரெலும்பும் கர்த்தபத்தின்
தோலு மல்லாமல்வே றுமுண்டோ? சொல்.

28 மென்மதுர வாக்கால் விரும்பும் சகம்; கடின
வன்மொழியி னாலிகழும் மண்ணுலகம்:—நன்மொழியை
ஓதுகுயி லேதங் குதவியது? கர்த்தபந்தான்
ஏதபரா தஞ்செய்த தின்று?

29 பகைசேரும் எண்ணுன்கு பற்கொண்டே நன்னு
வகைசேர் சுவையருந்து மாபோல்—தொகைசேர்
பகைவரிடம் மெய்யன்பு பாவித் தவரால்
சுகமுறுதல் நல்லோர் தொழில்.

30 வருத்தவளை வேயரசர் மாமுடியின் மேலாம்.
வருத்த வளையாத மூங்கில்—தரித்திரமாய்
வேழம்பர் கைப்புகுந்து மேதினியெல் லாந்திரிந்து
தாழுமவர் தம்மடிக்கீழ்த் தான்.

31 நொய்தாந் திரணத்தின் நொய்தாகும் வெண்பஞ்சு;
நொய்தா மிரப்போன் நுவலுங்கால்—நொய்யசிறு
பஞ்சுதனின் நொய்யானைப் பற்ருதே காற்றணுக
அஞ்சுமவன் கேட்ப தறிந்து.

32 ஆசைக் கடியான் அகிலலோ கத்தினுக்கும்
மாசற்ற நல்லடியா னவானே;—ஆசை
தனையடிமை கொண்டவனே தப்பா துலகந்
தனையடிமை கொண்டவனே தான்.

---

*சாமரை என்னும் பாடம்.

33 கற்ருேர் கனமறிவர் கற்ருேரே; கற்றறியா
மற்ருே ரறியார்; வருத்தமுறப்—பெற்றறியா
வந்தி பரிவாய் மகவைப் பெறுந்துயரம்
நொந்தறிகு வாளோ; நுவல்.

34 ஈக்கு விடம்தலையி லெய்துமிருந் தேளுக்கு
வாய்த்த விடங்கொடுக்கில் வாழுமே—நோக்கரிய
பைங்கணர வுக்குமிடம் பல்லளவே; துர்ச்சனருக்
கங்கமுழு தும்விடமே யாம்.

35 ஆனை மருப்பும் அருங்கவரி மான்மயிரும்
கான வரியுகிரும் கற்ருேரும்—மானே!
பிறந்தவிடத் தன்றிப் பிறிதொரு தேசத்தே
செறிந்தவிடத் தன்ருே சிறப்பு?

36 கர்ப்பூரம் போலக் கடலுப் பிருந்தாலும்
கர்ப்பூர மாமோ கடலுப்பு? பொற்பூரும்
புண்ணியரைப் போல விருந்தாலும் புல்லியர்தாம்
புண்ணியரா வாரோ? புகல்.

37 இன்னல் தரும்பொருளை ஈட்டுதலும் துன்பமே;
பின்னதனைப் பேணுதலும் துன்பமே;—அன்ன
தழித்தலும் துன்பமே; அந்தோ, பிறர்பால்
இழத்தலும் துன்பமே யாம்.

38 பொற்பறிவில் லாதபல புத்திரரைப் பேறலினோர்
நற்புதல்வ னைப்பெறுதல் நன்ருமே;—பொற்கொடியே!
பன்றிபல குட்டி பயந்ததனு லேதுபயன்
ஒன்றமையா தோகரிக்கன் ருேது.

39 ஆயுமலர்த் தேன்வண் டருந்துவது போலிரப்போர்
ஈயுமவர் வருந்தாதேற் றலறம்;—தூயவிளம்
பச்சிலையைக் கீடமறப் பற்றியரிப் பதுபோல்
அச்சமுற வாங்கல் அகம்.

40 பொன்னும் கரும்பும் புகழ்பாலும் சந்தனமும்
சின்னம் படவருத்தம் செய்தாலும்—முன்னிருந்த
நற்குணமே தோன்றும்; நலிந்தாலு முத்தமர்பால்
நற்குணமே தோன்றும் நயந்து.

# னகர, நகர, ணகர பேதங்கள்

அ

அரன்—சிவன்
அரண்—மதில்
அனு—தொடர்ச்சி
அணு—சிறுமை
அனை—தாய்
அணை—சேர்
அன்னம்—சாதம்
அண்ணம்—மேல்வாய்
அன்னாள்—அவள்
அந்நாள்—அந்த நாள்

ஆ

ஆனி—ஆனி மாதம்
ஆணி—உரையாணி; எழுத்தாணி; மேன்மை
ஆனை—யானை
ஆணை—சத்தியம்
ஆன்—பசு
ஆண்—ஆண் மகன்

இ

இனை—வருந்து
இணை—ஒப்பு
இதன்—இதனுடைய
இதண்—பரண்

உ

உன்னி—நினைத்து
உண்ணி—உணி
உன்—நினை
உண்—சாப்பிடு

ஊ

ஊன்—மாமிசம்
ஊண்—உணவு

எ

என்—என்னுடைய
எண்—இலக்கம்; நினை
என்னாள்—எனது நாள்
எந்நாள்—எந்த நாள்

ஏ

ஏனம்—பன்றி
ஏணம்—மான்
ஏனை—ஏனைய; மற்றைய
ஏணை—புடவைத் தொட்டில்

க

கனம்—பாரம்
கணம்—க்ஷணம்; கூட்டம்
கனி—பழம்
கணி—வேங்கை மரம்
கனை—ஒலி; நிறைவு
கணை—அம்பு
கன்னி—குமரி
கண்ணி—மாலை

கா

கானம்—காடு
காணம்—பொன்
கான்—காடு
காண்—பார்

கு

குனி—வளை; வில்
குணி—முடவன்

கோ

கோன்—அரசன்
கோண்—வளைவு

ச

சனம்—ஜனம்
சணம்—க்ஷணம்

சா

சானம்—பெருங்காயம்
சாணம்—சாணி

சு

சுனை—நீர்ச்சுனை
சுணை—கூர்மை

சே

சேனம்—பருந்து
சேணம்—மெத்தை

சோ

சோனை—விடா மழை
சோணை—சோணசலம்

த

தனி—தனிமை
தணி—ஆறு; தணித்துக்கொள்
தன்னம்—அற்பம்
தண்ணம்—காடு
தன்னாள்—தனது நாள்
தந்நாள்—தமது நாள்
தன்மை—சுபாவம்
தண்மை—குளிர்ச்சி
தன்—தன்னுடைய
தண்—குளிர்ச்சி

தி

தினை—ஒருவகைத் தானியம்
திணை—நிலம்; ஜாதி
தின்—சாப்பிடு
திண்—திட்பம்
தின்மை—தீமை
திண்மை—வலிமை

து

துனி—துன்பம்
துணி—வஸ்திரம்; வெட்டு
துனை—வேகம்
துணை—சகாயம்; உதவி

தூ

தூனம்—வருத்தம்; அசைவு
தூணம்—தூண்

தே

தேன்—அழகு; இனிமை
தேண்—தெளிவு

ந

நன்னுதல்—கடித்தல்
நண்ணுதல்—பொருந்துதல்

நா

நானம்—வாசனை
நாணம்—வெட்கம்
நானான்கு—நான்கு நான்கு
நாணான்கு—நாள் நான்கு
நான்—யான்
நாண்—வெட்கம்; கயிறு

நு

நுனி—முனை
நுணி—கூர்ந்தறி
நுன்—உன்
நுண்—கூர்மையான

ப

பனி—பனி; குளிர்ச்சி
பணி—வேலை; கட்டளை
பனை—பனைமரம்
பணை—பருமை; பெருமை
பன்—பேசு
பண்—இசைப்பாட்டு; செய்
பன்மை—பன்மைச் சொல்
பண்மை—தகுதி
பரன்—மேலானவன்
பரண்—மேற்றட்டு

பா

பானம்—நீர்த்த வுணவு
பாணம்—அம்பு
பானி—பருகு
பாணி—கள்; பழரசம்
பான்—பத்தின் திரிபு
பாண்—பண்

பு

புனரி—புனருத்தண்டு
புணரி—கடல்
புனர்—திரும்பவும்
புணர்—சேர்
புனை—புதுமை
புணை—தெப்பம்; மூங்கில்
புன்—புன்மை; சிறுமை
புண்—விரணம்

பூ

பூனை—பூனை
பூணை—முல்லை நிலம்

பே

பேன்—(தலைப்) பேன்
பேண்—காப்பாற்று

ம

மனம்—மனசு
மணம்—வாசனை; கலியாணம்
மனை—வீடு
மணை—பலகை
மன்—அரசன்; பெருமை; பொருந்து
மண்—பூமி
மன்மகள்—அரசன் மகள்
மண்மகள்—பூமாதேவி
மன்னுதல்—பொருந்துதல்
மண்ணுதல்—அலங்கரித்தல்

மா

மானம்—பெருமை
மாணம்—பெருமை
மான்—மரை
மாண்—பெருமை

மு

முன்னாள்—பூர்வநாள்
முந்நாள்—மூன்று நாள்

வ

வன்னம்—நிறம்
வண்ணம்—நிறம்
வன்மை—வலிமை
வண்மை—ஈகை; வளமை

வெ

வெந்—முதுகு
வெண்—வெண்மை

---

## லகர, ளகர பேதம்

அ

அலகம்—யானைத்திப்பிலி
அளகம்—பெண் மயிர்
அலகு—பறவை மூக்கு; துடைப்பம்
அளகு—பெண் மயிர்; பெண் கூகை
அலகை—பிசாசம்
அளகை—அளகாபுரி
அலம்—கலப்பை
அளம்—உப்பளம்
அலி—பேடி
அளி—வண்டு; கொடை
அலை—கடலின் திரை
அளை—வளை; தயிர்
அல்—இருள்; மதில்
அள்—அள்ளு
அவல்—ஒருவகை யுணவு; குளம்
அவள்—அப் பெண்

ஆ

ஆலி—மழை
ஆளி—ஆள்வோள்; சிங்கம்
ஆல்—ஆலமரம்
ஆள்—ஆண் மகன்

இ

இலகு—இலேசு; ஒளிசெய்
இளகு—நெகிழ்
இலை—சாப்பிடும் இலை
இளை—மெலி

உ

உலம்—திரண்டல்
உளம்—உள்ளம்
உலர்தல்—காய்தல்; வாடல்
உளர்தல்—தடவுதல்; சுழலல்
உலவு—உலாத்து
உளவு—வேவு; இரகசியம்
உலுக்கு—குலுக்கு; அரை
உளுக்கு—சுளுக்கு
உலை—கமமாளனுலை; நீருலை
உளை—பிடர்மயிர்
உல்—தேங்காயுரிக்குங் கருவி
உள்—உட்புறம்
உல்கு—சுங்கம்
உள்கு—நினை

எ

எல்—சூரியன்; பகல்
எள்—ஒரு தானியம்

ஒ

ஒலி—ஆரவாரம்; இடி
ஒளி—அறிவு; பிரகாசம்
ஒல்—முடிவிடம்; ஒலிக்குறிப்பு
ஒள்—அழகு

க

கலம்—பாத்திரம்; கப்பல்
களம்—இடம்; கறுப்பு; மிடறு
கலர்—கீழ்மக்கள்
களர்—களர் நிலம்
கலவு—கலத்தல்
களவு—திருட்டு
கலி—ஒலி; சிறுமை
களி—மகிழ்ச்சி
கலை—ஆண்மான்; சீலை; மேகலை
களை—அயர்வு; அழகு; பயிர்க்களை
கலைவு—குலைவு; பிரிவு
களைவு—களைதல்
கல்—கல்லு; மலை; படி
கள்—வண்டு; மது
கல்லல்—கல்லுதல்
கள்ளல்—களவு செய்தல்

கா

காலம்—சமயம்; பருவம்
காளம்—மேகம்; நஞ்சு
காலன்—இயமன்
காளன்—மகாகாளன்
காலி—பசுக்கூட்டம்
காளி—பார்வதி
காலை—விடியற்காலம்
காளை—எருது; இளையோன்

கி

கிலி—பயம்
கிளி—கிளிப்பிள்ளை

கீ

கீல்—கதவின் கீல்
கீள்—கௌபீனத்தோடு இசைந்த உடை

கு

குரல்—ஒலி; இரகு [குறள்
குறள்—குறுமை; திருவள்ளுவர்
குலம்—இனம்; கூட்டம்
குளம்—தடாகம்; நெற்றி
குலிசம்—வச்சிராயுதம்
குளிசம்—வளையம்; சக்கரம் வரைந்த தகடு

கூ

கூலம்—நீர்க்கரை; கடைவீதி; பல பண்டம்
கூளம்—குப்பை
கூலி—சம்பளம்
கூளி—பேய்; எருது

கே

கேலி—பரிகாசம்
கேளி—விளையாட்டு

கொ

கொலு—இராஜ சமுகம்
கொளு—கொளுச்சொல்
கொலை—கொல்லுதல்; வருத்தம்
கொளை—இசைப்பாட்டு
கொல்—கொல்லன்; வருத்து
கொள்—ஒரு தானியம்
கொல்லி—ஒரு மலை
கொள்ளி—நெருப்புறு விறகு
கொல்லை—தோட்டம்
கொள்ளை—ஒரு நோய்; பறித்தல்

கோ

கோலம்—அழகு; பன்றி
கோளம்—உருண்டை
கோலி—இலந்தை
கோளி—அத்தி; ஆல்
கோல்—அம்பு; தடி
கோள்—புறங்கூறல்

ச

சகலம்—எல்லாம்
சகளம்—உருவம்
சலம்—அசைவு, ஜலம்

சளம்—துன்பம்; வஞ்சனை
சலி—மனஞ்சலி
சளி—கோழை

சா

சாலிகை—கவசம்
சாளிகை—பணப்பை

சு

சுல்லி—அடுப்பு
சுள்ளி—சிறு விறகு

சூ

சூலை—ஒரு நோய்
சூளை—கற்சூளை
சூல்—கர்ப்பம்
சூள்—ஆணை; சபதம்

சே

சேதில்—சிறு துண்டு; தோல்
சேதிள்—தோல்; பொருக்கு
செல்லு—செல்
சேள்ளு—தெள்ளுப்பூச்சி

சொ

சொல்லல்—சொல்லுதல்
சொள்ளல்—சொத்தை

சோ

சோலி—ஜோலி; காரியம்
சோளி—பிச்சைக்காரர் பை

த

தலை—சிரசு
தளை—கட்டு; கயிறு
தவலை—பெரிய பித்தளைப்பாத்திரம்
தவளை—மண்டூகம்

தா

தாலம்—தட்டம்; நா
தாளம்—ஒருவகை வாத்தியம்
தாலி—மங்கல நாண்
தாளி—பனை
தால்—தாலாட்டு; நா
தாள்—கால்; முயற்சி

து

துலக்கம்—தெளிவு; பிரகாசம்
துளக்கம் — அசைவு; கலக்கம்; வருத்தம்
துலை—ஒப்பு, துலா; தூரம்
துளை—துவாரம்; மூங்கில்
துலைத்தல்—தொலைத்தல்
துளைத்தல்— துளைசெய்தல்

தொ

தொலி—உமி; தோல்
தொளி—சேறு
தொலை—தூரம்
தொளை—துளை
தொல்லை—தொந்தரை; பழமை
தொள்ளை—துளை; மரக்கலம்

தோ

தோல்—தோல்; யானை
தோள்—கை; புயம்

ந

நலி—நோய்
நளி—குளிர்; நெருக்கம்
நல்லார்—அறிஞர்; மாதர்
நள்ளார்—பகைவர்

நா

நால்—நான்கு
நாள்—தினம்; புதுமை

நீ

நீலம்—இருள்; ஒருவகை நிறம்; கருங்குவளை
நீளம்—நெடுமை
நீலி—அவுரி; துஷ்டை; காளி
நீளி—நெடியன்

ப

பலபலெனல்—ஒலிக்குறிப்பு
பளபளெனல்—ஒளிக்குறிப்பு
பலிதம்—கனியுள்ளது; பலிப்பது
பளிதம்—கருப்பூரம்
பல்லி— இடையரூர்; கெவுளி
பள்ளி—கோயில்; நித்திரை
பல்லு—தந்தம்
பள்ளு—ஒருவகைத் தமிழ் நூல்

பா

பாலம்—நெற்றி; பூமி

பாளம்—வெடிப்பு
பாவலை—பிரிதல்; பரலை நிலம்
பாவளை—(கமுகு, தென்னை முதலிய வற்றின்) பாளை

பு

புலி—புலி; வேங்கைமரம்
புளி—ஒரு சுவை; புளியமரம்
புல்—(அறுகம்) புல்லு
புள்—பறவை
புல்லி—புறவிதழ்
புள்ளி—பொறி; மதிப்பு

பொ

பொலிதல்—சிறத்தல்; மிகுதல்
பொளிதல்—துளை செய்யல்
பொல்லாமணி—துளையிடாதமணி
பொள்ளாமணி—சுயம்புமணி

போ

போலி—ஒப்பு
போளி—ஒருவகை அப்பம்

ம

மல்லம்—கதுப்பு; மற்போல்
மள்ளம்—வலி
மல்லர்—மற்போர் செய்வோர்
மள்ளர்—உழவர்; படைவீரர்

மா

மாலிகை—கழுத்தணி மாலை
மாளிகை—வீடு
மாலுதல்—மயங்குதல்
மாளுதல்—அவற்றல்
மால்—மயக்கம்; திருமால்
மாள்—சா

மூ

மூலி—மரம்; வேருள்ளது
மூளி—காதறை; விளிம்பில்லாதது
மூலை—கோணம்
மூளை—மச்சை

மெ

மெல்ல—மிருதுவாய்
மெள்ள—மெதுவாய்

வ

வலம்—வலப்பக்கம்; வலிமை
வளம்—அழகு; செல்வம்; நன்மை
வலவன்—தேர்ப்பாகன்
வளவன்—சோழன்
வலி—நோய்; வல்லமை
வளி—காற்று
வலை—மீன் வலை
வளை—சக்கரம்; சங்கு; புற்று
வல்—சீக்கிரம்; சூதாடு கருவி
வள்—காது; கூர்மை
வல்லி—கொடி; பெண்
வள்ளி—ஆபரணம்; வள்ளிக்கொடி
வல்லுரம்—காடு; வயல்; பூங்கொத்து
வள்ளூரம்—தசை
வல்லை—விரைவு
வள்ளை—ஒரு கொடி

வா

வாலம்—வால்
வாளம்—வளைவு; வாள்
வால்—வெண்மை; சுத்தம்
வாள்—ஒளி

வி

விலக்கு—தவிர்
விளக்கு—விளங்கச்செய்
விலம்பனம்—தாமதம்
விளம்பனம்—தாமதம்
விலா—பழு
விளா—விளாமரம்
விலை—கிரயம்
விளை—உண்டுபண்ணு
வில்—தனு; ஒளி
விள்—பேசு; திற

வெ

வெல்லம்—கரும்பின் கட்டி
வெள்ளம்—நீர்ப்பெருக்கு

வே

வேலை—கடல்; தொழில்
வேளை—காலம்; ஒரு பூடு
வேல்—வேலாயுதம்
வேள்—குமரன்; மன்மதன்

விலை, ரூ. 2.

# தற்கால
# தமிழ்ச்சொல்லகராதி

திவான்பஹதூர் ச. பவானந்தம்பிள்ளை அவர்கள், ஐ. எஸ். ஓ.,
எப். ஆர். எச். எஸ். (லண்டன்), எம். ஆர். ஏ. எஸ். (லண்டன்),
சென்னை நகர் ஷேரிப்,

சென்னை, சர்வகலாசங்கத்தின் தமிழ்க்கல்விச்சபை அக்கிராசனாதிபதி;
பேராசிரியர், நச்சினார்க்கினியர் முதலியோர் உரையுடன் கூடிய
தொல்காப்பியம், நக்கீரனார் உரையுடன் கூடிய இறையனா
ரகப்பொருள், அமிர்தசாகரனார் இயற்றியதும் விருத்தி
யுரையுடன் கூடியதுமாகிய யாப்பருங்கலம்
விளக்க உரை முதலியவற்றுடன் கூடிய
போகத்தியத்திரட்டு முதலிய
நூல்களின் பதிப்பாசிரியர்;
'பவானந்தர்' கழக ஸ்தா
பகர் பதிப்பித்தது.



ஆரிய பாஷையோடொத்து அதிபூர்விகமாயுள்ளதும், மதுரையிலே முத லிடை கடை யென்னு முச்சங்கத்திலே வளர்க்கப்பட்டதும், வடவேங்கடந் தென்குமரி யென முன் எல்லை கூறப்படினும், அவ்வெல்லை கடந்து பற்பல தேசங்களிலுந் தற்காலம் பரந்து பேசப்படுவதுமாகிய இன்ன பெருமையுடைய இனிய தமிழ்ப் பாஷையிலே ஆசிரியரின்றிக் கற்க விரும்புவோர் நூல்களைப்பிரயாசமின்றிக் கற்றற்குக் கருவியாக இருப்பது அகராதி.

சதுரகராதி முதலிய பற்பலவகராதிகள் இருப்பினும் அவைகளெல்லாம் பெருவாரியாய்ப் பள்ளிப்பிள்ளைகட்கும் பிறர்க்கும் எளிதிற் பயன் தருவன அல்ல. அன்றியும், அவைகளின் விலை ஏற்றமும், உருவத்தோற்றமும் எல்லாரும் எளிதிற் பெற்று உபயோகிக்க அநுகூலமானவைகளல்ல. ஆகையால், வீணாக விரித்தும், மிகச் சுருக்கியும் பயனற்றதாக்காமல், இதனைத் தற்காலத் தமிழ் மாணவரும் பிறரும் நயமாக வாங்கி நவீன முறையால் உபயோகித்து நலம் அடையுமாறு, நல்லெழுத்திலும் நற்காகிதத்திலும் அச்சிட்டிருக்கின்றோம்.



இன்னும் இம்மொழியில் வந்து வழங்கும் வடசொற்களில் இன்றியமையாதவைகளையும், திசைச்சொற்களில் அரசாங்க முறையிலும், அதிகார முறையிலும் வர்த்தகமுறையிலும், சாஸ்திர சாம்பிரதாய இலௌகிக முறைகளிலும் உள்ள எத்தனையோ சொற்களையும் இதிற் புதுவனவாகச் சேர்த்திருக்கின்றோம்.

Printed at the Guardian Press, 158-B, Broadway, Madras.

திவான் பஹதூர்-வி. கிருஷ்ணமாச்சாரியார் இயற்றிய

## நீதி கதா கிருதிகள்.

'ஈஸாப் கதைகள்' என்று நீதி புகட்டும் பல சிறு கதைகள் வழங்கிவருவதைப் பலரும் அறிந்திருக்கலாம். அக் கதைகள் பல நூற்றாண்டுகளுக்கு முன் இயற்றப்பட்டவை. அவைகளின் அருமை பெருமைகளால் அவை இன்றும் அழியாமல் உலகம் முழுவதும் பிரபலமாய் வழங்கிவருகின்றன. அநேகமாய் முக்கியமான பாஷைகள் பலவற்றிலும் அவை மொழிபெயர்க்கப்பட்டுள்ளன. பள்ளிக்கூடச் சிறுவர்களுக்கு அவை மிகவும் ஏற்றவையாயிருக்கின்றன. ஆதலால், காலஞ்சென்ற திவான் பஹதூர்-வி. கிருஷ்ணமாச்சாரியார் அவர்கள், அக்கதைகளிற் சிலவற்றை, சிறுவர்கள் இசையுடன் பாடுவதற்கேற்ற கீர்த்தனைகளாக, எளிய நடையில் இயற்றியுள்ளார். அவை, இப்பொழுது நல்ல கடிதத்தில் படங்களுடன் நீதி கதா கிருதிகள் என்னும் புத்தகமாகப் பதிக்கப்பட்டுள்ளன. விலை அ. 4.

## பால நீதிச் செய்யுள் நூற்றிரட்டு.

ஔவையார், அதிவீரராம பாண்டியன் முதலிய முற்கால வித்வசிரோமணிகள் எழுதிவைத்த அருமையான நீதி நூல்கள், சிறுவர்கள் மனத்திலும் பதியக்கூடியவாறு தெளிவான எளிய நடையில், மனப்பாடம் பண்ணுவதற்கு அனுகூலமான செய்யுள் வடிவில் அமைந்திருக்கின்றன. ஆதரிப்பாரில்லாமல் அந்நூல்கள் இப்பொழுது பாடசாலைகளில் அதிகமாகப் போதிக்கப்படவில்லை. தங்களைக் கல்விமான்கள் என்று மதித்திருக்கும் பல தமிழ் மக்கள் கூடத் தங்கள் முன்னோர்களுக்கு அரிச்சுவடிப் பாடமான இவ்வரிய நூல்களைக் கண்ணாலும் கண்டறியாதவர்களா யிருக்கிறார்கள். இது தமிழ் நாட்டுக்கும் தமிழ் மொழிக்கும் மிகவும் மானக்கேடான விஷயமன்றோ? இக்குறைப்பாட்டை நிவர்த்திக்கக்கருதி அவ்வரிய நீதி நூல்களை, சிறுவர்களும் பிறரும் படிப்படியாய்க் கற்று அறிந்து கொள்வதற்கேற்றவாறு பல பகுதிகளாகப் பிரித்து, பதவுரையுடன் நல்ல கடிதத்தில் தெளிவான எழுத்துக்களால் அழகாக அச்சிடலாயிற்று. அந் நீதிநூல்களின் பகுப்பும் அடக்கமும் வருமாறு:

| | அ. | பை. |
|---|---|---|
| முதற்படி (ஜூனியர்-Junior). | | |
| பகுதி-1. உலகநீதி, ஆத்திசூடி. | 1 | 6 |
| பகுதி-2. கொன்றைவேந்தன், வெற்றிவேற்கை. | 2 | 0 |
| பகுதி-3. வாக்குண்டாம், நல்வழி. | 2 | 0 |
| இடைப்படி (இண்டர்மீடியேட்-Intermediate). | | |
| பகுதி-1. நீதிவெண்பா. | 2 | 6 |
| பகுதி-2. நன்னெறி, இனிது 40, இன்னா 40. | 3 | 0 |
| உயர்படி (ஸீனியர்-Senior). | | |
| பகுதி-1. முதுமொழிக்காஞ்சி, நீதிநெறி விளக்கம். | 3 | 6 |
| பகுதி-2. திரிகடுகம், நான்மணிக்கடிகை. | 5 | 0 |

South Indian Tamil Reader V., 6 As.